# குமரன்

## ஆரம் 13, முத்து 36

## May 14, 1936

Record no. 313

*Kuma<u>r</u>an*

*Āram 13, muttu 36*

*May 14, 1936*

Record no. 313

REG. NO. M. 1823. 20 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5—0—0
ஆறு மாதம் 3—0—0
ஸிலோன், பர்மா வருஷம் ஒன்றுக்கு ரூ. 6—0—0
மலாய் முதலிய வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7—0—0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2—0—0
வியாபார சம்பந்தமானது ரூ. 0—12—0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கு எழுதவும்.

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY.

ஆசிரியர்:— சோ. முருகப்பா.

ஆரம் 13. காரைக்குடி, தாது-ஞு வைகாசி-மீ 1உ (14—5—36.) முத்து 36.

## அபிஸீனிய மன்னரின் மணிமுடி

### இரண்டுபாட்டில்சாராயத்தால்வாங்கப்பட்டது

### பிரிட்டன்—அபிஸீனிய யுத்த வரலாறு

கிரீடம் தரிக்கும் சிரசு அபாயத்திற்கிடமானது. சரித்திரம் இவ்வுண்மையை மீண்டும் மீண்டும் கற்பிக்கிறது. அபிஸீனியச் சக்கிரவர்த்தியின் கிரீடம் உலகில் அதிகமான ஏற்றத் தாழ்வுகளை அனுபவித்தது. தியோடர் சக்கிரவர்த்தி போரில் இழந்த அக்கிரீடம் ரோல்ப் என்ற ஜெர்மனிய நிருபரால் எடுக்கப்பட்டு ப்ருஷ்ய சக்கிரவர்த்தி வில்லியத்திற்குப் பரிசாக அளிக்கப்பெற்றது. வில்லியம் அரசர் கிரீடத்தை விக்டோரியா மகாராணிக்குப் பரிசாக அளித்தார். விக்டோரியா மகாராணி அதை விக்டோரியா அன்ட் ஆல்பர்ட் பொருட்காட்சிசாலைக்கு பரிசாக அளித்தார். 1925-ம் வருடம் அது அப்பொருட்காட்சிசாலை நிர்வாகிகளால் அபிஸீனியச்சக்கிரவர்த்தியிடம் ஒப்புவிக்கப்பட்டது. இப்பொழுது அபிஸீனியச் சக்கிரவர்த்தி பாலஸ்தீனத்துக்குப் போய்விட்டார். அபிஸீனியா இத்தாலி வசமாகிவிட்டது. சக்கிரவர்த்தியின் கிரீடத்தின் கதி என்னவாகும்?

கிரீடம் தரிக்கும் சிரசு எப்பொழுதுமே அபாயத்திற்கிடமானது. கிரீடம் நிரந்தரமான நிலையற்றது. சரித்திர வாயிலாகப் பார்த்தால் ஒவ்வொரு தேசத்திலும் அரசர்களது வரலாறும் மேற்கூறிய உண்மைகளை விளக்கிக் காட்டுகின்றன. ஆயினும் அபிஸீனியச்சக்கரவர்த்தி தியோடோரின் கிரீடம் வேறெந்த அரசர்களின் கிரீடங்களையும் விட அதிகமான ஏற்றத்தாழ்வுகளை அனுபவித்ததெனக் கூறலாம்.

சுமார் 72 ஆண்டுகளுக்கு முன் தியோடோர் அபிஸீனியச்சக்காவர்த்தியாகவிருக்கும்போது அந்நியநாட்டு உறவு விஷயங்கள் மிகவும் சிக்கலாகவிருந்தன. முக்கியமாக அபிஸீனியாவுக்கும் இங்கிலாந்துக்குமிடையில் பல சிக்கலான பிரச்னைகள் ஏற்பட்டன. இந்நிலைமைகளைத் திறமையுடன் சமாளிப்பதற்குப் பதிலாக தியோடோர் சக்காவர்த்தி தந்நாட்டிலுள்ள அந்நியர்களனைவரையும் கைதுசெய்தார். இரு வருடங்களுக்குப் பின் தமக்கிடையே ஏற்பட்ட சிக்கலான பிரச்னைகளை சமரஸமாக தீர்க்கும் பொருட்டு பிரிட்டன் அபிஸீனியாவுக்கு ஓர் தூதரை அனுப்பியது. அத்தூதருக்கு அபிஸீனியாவில் ஏனைய அந்நியர்களின் கதியே நேர்ந்தது.

பிரிட்டிஷ் தூதர் கைது செய்யப்பட்டதை பிரிட்டனால் பொறுக்கமுடியவில்லை. எனவே 1868-ம் வருடத்தில் பிரிட்டன் ஜெனரல் நேப்பியர் என்பவரின் தலைமையின் கீழ் ஓர் படையை அபிஸீனியாவுக்கு அனுப்பியது. இப்படையுடன் அப்போது ருஷ்ய அரசராகவிருந்த வில்லியத்தின் படைகளும் சேர்ந்து அபிஸீனியாவுக்குச் சென்றன. இப்படைகளோடு ஜெர்ஹார்ட்ரோல்ப் என்ற ஜெர்மனியரும் யுத்த நிருபராகச் சென்றிருந்தார். பிரிட்டிஷ் படைகள் மஸோவாவையடைந்ததும் மாக்டாலா கோட்டையை நோக்கி பயணமாயின. மாக்டாலா கோட்டை மிகவும் பலமானதென்றும் அதைக் கைப்பற்றுவது முடியாத காரியமென்றும் அபிஸீனியர்கள் உறுதிகொண்டனர். இறுதியாக பெரிய வெள்ளிக்கிழமைக்கும் ஈஸ்டர் திங்கட்கிழமைக்குமிடையில் இரு கட்சிப் படைகளுக்கும் கடும்போர் நிகழ்ந்தது. பெரிய வெள்ளிக்கிழமையன்று அரோக் என்னுமிடத்திற்கருகாமையிலுள்ள கோட்டையில் அபிஸீனியர்கள் முறியடிக்கப்பட்டனர். அந்த யுத்தத்தைப்பற்றி ரோல்ப் பின்வருமாறு எழுதுகிறார்.

ஈஸ்டர் திங்கள் ஏப்ரல் 13

"நேற்று கடும்போர் நிகழ்ந்தது. மழை அதிகமாகப் பெய்தது. இடியும் மின்னலும் பீரங்கிக் குண்டுகளின் சப்தத்தோடு போட்டிபோட்டன. பிரிட்டனின் ஐரோப்பியப் படைகளும் இந்தியப் படைகளும் உற்சாகமாக யுத்தத்திற்குச் சென்றன. அதிகாலையில் 5 மணிக்கு படைகள் ஆகாரம் கூட அருந்தாமல் யுத்தகளத்துக்குச் சென்று தீவிரமாக யுத்தம் செய்தன. பிற்பகல் 4 மணி வரையிலும் பிரிட்டிஷ் படைகள் யுத்தம் செய்தபின் நன்கு களைத்துத் திரும்பின.

கடற்படை வீரர்களும் யுத்தத்தில் தீவிரமாக கலந்து கொண்டனர். நாங்கள் எதிர்பார்த்தது போல எங்களது படைகள் உற்சாகமாக விருந்திருப்பின் நேற்று மாலையிலேயே நாங்கள் கோட்டையை தாக்கியிருப்போம்.

கைதிகளை விடுதலை செய்வது சம்பந்தமாக இன்று வரையிலும் சக்கிரவர்த்திகளுடன் கடிதப் போக்குவரத்து நடைபெற்று வருகிறது. ஏற்கனவே ஆங்கிலேயக் கைதிகள் முகாம் வந்து சேர்ந்துவிட்டனர். எவ்வித நிபந்தனைகளுமின்றி மற்றுமுள்ள கைதிகளையும் இன்றிரவிற்குள் விடுதலை செய்து விடலாமெனக்கருதுகிறோம். மேலும்தியோடோர் சக்கிரவர்த்தி சரண்புக வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டிருக்கிறார். அவர் அதற்கிசையாவிட்டால் மகடாலாகோட்டை தாக்கப்படும்.

தியோடோரின் சைனியத்தில் 5000 வீரர்களும் 20,000 பெண் வீரர்களுமிருந்தனர். யுத்தத்தில் இருபத்தி நான்கு ஆங்கிலேயர் காயமடைந்தனர். அவர்களுள் ஒருவர் சேனாதிபதியாவார். ஒருவரும் மரணமடையவில்லை.

மறுநாள் நடைபெற்ற யுத்தத்தைப் பற்றி ரோல்ப் பின்வருமாறு எழுதுகிறார்.

செவ்வாய்க்கிழமை ஏப் 14

நேற்று ஒன்பது மணிக்கு எங்களது படைகள் எதிரிகளை தாக்க ஆரம்பித்தன. சுமார் ஒன்றேகால் மணி நேரத்தில் எங்களது படைகள் பாலாஜிலாஸி என்ற இடங்களுக்கிடையேயுள்ள திடலில் ஏறியது. அங்கு 11 எதிரிகளின் தலைவர்களும் 1800 யுத்த வீரர்களும் எங்களது படைகளிடம் சரண்புகுந்தனர். இந்த இடத்திலிருந்து கோட்டைக்கு அகலம்குறைந்த ஓர் வழியாகச் செல்லவேண்டும். கோட்டையைச் சில குதிரைப்படை வீரர்கள் காவல் புரிந்துகொண்டிருந்தனர். நாங்கள் செல்வதைக் கண்டதும் காவல்புரிந்துகொண்டு நின்ற வீரர்களில் நால்வர் எங்களை நோக்கிப் பாய்ந்தனர். அவர்களில் ஒருவர் சக்கிரவர்த்தியேயாகும். அவர் சிறிதுநேரம் துப்பாக்கிப் பிரயோகம் செய்தபின் பின்வாங்கிவிட்டார்.

இதற்குப் பின் தியோடோரின் பீரங்கிப் படைகள் பிரிட்டிஷ் படைகளைத்

(19-ம் பக்கம் பார்க்க)

## மலாய் நாட்டுச் செய்திகள்

(நமது நிருபர் ஏர்மெயில்)

### சிங்கப்பூர் நேவல் பேஸ் செலவு

சிங்கப்பூர் நேவல் பேஸ் கட்ட ஆரம்பித்ததிலிருந்து இதுவரை 8,693,000 பவுன் செலவாக்கப்பட்டிருக்கிறது. அதில் 8,670,000 பவுனுக்கு யந்திரங்கள் வாங்கப் பெற்றிருப்பதாகவும், மீதி 23,000 பவுன் இதர சாமான்கள் வாங்கியிருப்பதாகவும் சொல்லப்படுகிறது. இதுபோதாதென்று வியாழக்கிழமையன்று லண்டன் பார்லிமெண்டில் வேறு 2,000,000 பவுன் செலவிட வேண்டுமென்று திடீரென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. எதற்காக இந்தத் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறதென்பது சிங்கப்பூரில் உள்ள அதிகாரிகளுக்குக் கூட தெரியாதாம். சப்பானியர்கள் தங்கள் பட்டாளத்தை ஸ்திரப்படுத்த அடுத்தவாரத்தில் 600 மில்லியன் என் அதிகமாகச் செலவுசெய்ய வேண்டுமென்று தீர்மானித்திருப்பதாலும், அமெரிக்காவிலும் அதிகமாய் செலவிட அமெரிக்க கவர்மெண்டார் தீர்மானித்திருப்பதாலும் கீழ்நாடுகளில் முக்கிய ஸ்தலமாகிய சிங்கப்பூர் நேவல் பேசை பலப்படுத்த பிரிட்டிஷார் தீர்மானித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது.

### ரப்பர் மார்க்கெட்

ஏப்ரல் மாதத்தில் மலாய் நாட்டிலிருந்து 25,999 டன் ரப்பர் ஏற்றுமதி யாக்கப்பட்டிருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆதலால் ஏப்ரல் மாதம் வரை இவ்வருடத்தில் 160,088 டன் ரப்பர் ஏற்றுமதியாக்கப்பட்டிருப்பதாக ரப்பர் புள்ளிவிபரக்கணக்கு குறிப்பிடும் இலாக்காதாருடைய அறிக்கை கூறுகிறது. ரப்பர் கட்டுப்பாட்டுத் திட்டம் ஆரம்பித்ததில் இருந்து இதுவரை ஏற்றுமதியான ரப்பரில் ஏப்ரல் மாதத்தில் தான் குறைவாக ஏற்றுமதியாக்கப்பட்டிருப்பதாக ஷை அறிக்கை தெரிவிக்கிறது.

### மலேயாவும் பிரிட்டிஷ் வியாபாரமும்

பிரிட்டிஷ் சாமான்களில் 14 பெர்சண்ட் மட்டும் மலேயா இறக்குமதி யாக்குகிறதென்றும், மலேயா பிரிட்டிஷாருக்கு சொந்தமான காலனிகளில் செல்வம் பொருந்திய காலனியாயிருந்தும் பிரிட்டிஷ் வியாபாரத்தை சாஸ்தியாய் ஆதரிக்கிறதென்றும் அதை விருத்திசெய்யத் தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்றும் மலேயாவின் வியாபாரத்தைப்பற்றி லண்டனில் ஒரு பிரபலஸ்தர் பேசினர்.

### மலாக்காவில் குப்பை எரிக்கும் யந்திரம்

மலாக்காவில் பெங்காலன் ராமா ரோட்டுப் பக்கத்தில் குப்பைகளை எரிக்கும் யந்திரம் நூதன முறையில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. குப்பைகளை சாம்பலாய் எரித்துவிடுவதே மேலானதென்று இப்போது நிபுணர்கள் கருதுவதால் அதில் பாண்டித்யம் பெற்ற மிஸ்டர் சிலேட்டர் என்பவருடைய உதவியால் கீழ்நாடுகளிலேயே நல்லவிதமான யந்திரம் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதாகக் கருதப்படுகிறது.

### ரப்பர் செங்கல் உற்பத்தி

கொழும்பில் உள்ள ரப்பர் ஆராய்ச்சி போர்டின் கூட்டத்தில் ரப்பர் செங்கல்கள் செய்வதற்கும் ரப்பரிலிருந்து மற்ற இதர சாமான்கள் செய்வதற்கும் வேண்டிய யந்திரங்களை வாங்குவதற்கும் அவைகளை ஸ்தாபிப்பதற்கும் 30,000 ரூபாய் கைத்தொழில் இலாக்காத்தாரிடமிருந்து வாங்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது. 1938-ம் வருடத்திற்குள் அதற்குவேண்டிய ஏற்பாடுகள் செய்து முடிக்கலாமெனத்தெரிகிறது.

### ரப்பர் கட்டுப்பாட்டில் நம்பிக்கையில்லை

ரப்பர் அதிகமாய் செலவாக்கப்படுவதோடு ரப்பரைக்கொண்டு புதிய சாமான்கள் அதிகமாய் செய்யப்படவேண்டுமேயொழிய கட்டுப்பாட்டால் நன்மை அதிகமாய் ஏற்படாதென்றும் உலக நன்மைக்காக கட்டுப்பாட்டுத் திட்டத்தை நீடித்து வைப்பது அவ்வளவு உசிதமாயிருக்காதென்றும் கருதுவதாக இண்டர் நாஷனல் ரப்பர் ரெகுலேஷன்

(4-ம் பத்தி பார்க்க)

## காங்கிரஸ்காரர் கவனிப்பார்களா?

அடுத்த சட்டசபைத் தேர்தல் மிகவும் முக்கியமானதாகும். காங்கிரஸின் பலத்திற்கு அதுதான் கடைசிச் சோதனை. ஜனங்களின் வாக்குரிமை இப்பொழுது தாராளமாக்கப்பட்டிருக்கிறது. இனிப் பணக்காரரின் காலைப் பிடிக்கவேண்டிய அவசியமில்லை. நமது கவனம் முழுதும் பொது ஜனங்களின் கவனத்திற்கு திருப்பப்படவேண்டும். கிராமங்களில் 21 வயதிற்கு மேற்பட்டுப் படிக்கத் தெரிந்தவர்கள் பலரிருக்கின்றனர். அவர்களுக்கு ஓட்டாக யாரிடம் பதிந்துகொள்வது எப்படிப் பதிந்துகொள்வது என்ற விஷயமே தெரியாதிருக்கின்றது. பெரும்பாலான கிராம ஜனங்களுக்கு தங்களுக்குப் புதிதாக இத்தகைய ஓட்டுரிமையொன்று ஏற்பட்டிருப்பதாகவே தெரியாது.

கிராம அதிகாரிகளிடம் அந்தப் பொறுப்பைச் சர்க்கார் ஒப்படைத்திருந்தாலும் அவர்கள் இதில் பூரண கவனம் செலுத்துவார்களென்பதற்கு என்ன உத்தரவாதம்?

பொது ஜனங்களின் உரிமையைக் காப்பதிலும், அவர்களின் உரிமையைக் கொண்டு நாட்டிற்கு நன்மை செய்வதிலும் சிரத்தையுடைய காங்கிரஸ்காரர்கள் இந்த சந்தர்ப்பத்தில் கிராமம் கிராமமாகச் சென்று ஜனங்களுக்கு இந்த விஷயத்தை விளக்கி அவர்களை ஓட்டர்களாகப் பதிவு செய்வதில் அதிக கவனம் செலுத்தவேண்டும். மே முடிவிற்குள் ஓட்டர்களாகப் பதிவு செய்துகொண்டுவிடவேண்டியிருப்பதால் காங்கிரஸ்காரர்கள் அசிரத்தையாயிராமல் இப்பொழுதே கிராமங்களுக்குப் புறப்படுவார்களாக என்று ஒரு 'ஓட்டர்' எழுதுகிறார்.

### பெண்களுக்கு வேண்டுகோள்

#### ஓட்டராய்ச் சேருங்கள்

எழுதப்படிக்கத் தெரிந்த 21-வயதுக்கு மேற்பட்ட எல்லா ஸ்திரீகளுக்கும் புதிய சென்னை சட்டசபைக்கு ஓட்டுரிமை யுண்டு. ஆனால் அவர்கள் தங்களுக்கு எழுதத் தெரியுமென்பதை ரிஜிஸ்டிரேஷன் ஆபீஸர் முன்னிலையிலாவது கவர்மெண்டு உத்தியோகஸ்தரின் அத்தாட்சி பெற்றாவது மனுவை நேரில் எழுதிக் கொடுத்து ருஜுப்பிக்க வேண்டும். தகுந்த யோக்கியதையுள்ள ஸ்திரீகள் அனைவரும் மே 31ந் தேதிக்குள் ஓட்டர்களாகப் பதிவுசெய்து கொள்ள வேண்டும்.

காரைக்குடியில் முனிஸிபல் ஆபீஸில் மாலை 4 மணி முதல் 6மணிவரை ஓட்டர்களின் பெயர்கள் பதிவு செய்யப்படுகின்றன. ஆண் பெண்கள் அனைவரும் இந்த சந்தர்ப்பத்தில் தங்களுக்குக்கிடைக்கவிருக்கும் ஓட்டுரிமையைப் பிரயோஜனப்படுத்திக்கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

## கிழவனுக்கு குமரி கலியாணம்

### வீதியிலிருந்த வாலிபன் மணமகனுன்

தஞ்சைப் என்றவிடத்தில் வசித்து வந்த ஒரு பிராம்மணருக்கு வயதுவந்த பெண்ணொருத்தியிருந்தாள். அவளை அக்கிராமத்திலிருந்த 40 வயதுள்ள ஒரு பிராம்மணனுக்கு இரண்டாந்தாரமாகக் கொடுக்க முடிவு செய்யப்பட்டது. சென்ற சனிக்கிழமை இரவு கலியாணம் நிச்சயிக்கப்பட்டிருந்தது. மாப்பிள்ளை அன்று சகல வைபவங்களுடன் வந்தார். அவரை மணவறைக்குஅழைத்துச் செல்லப் பெண் வீட்டுக்காரர் வந்திருந்தனர். அப்போதுதான் குட்டு வெளிப்பட்டது. மாப்பிள்ளை 65 வயதுடைய கிழவரென்றும் மயிரெல்லாம் நரைத்திருந்ததாகவும், பற்களும் விழுந்திருந்ததாகவும் தெரிந்தது. பெண்ணின் தகப்பனார் மிக்க வருத்தமடைந்தார். அந்தக் கிழவருக்கு 16 வயதுடைய பெண்ணைக் கொடுப்பது கூடாதென முடிவு செய்யப்பட்டது.

பெண்ணும் தனக்குப் பாட்டனைப் போலுள்ள அவரை மணக்க முடியாதென்றும் தம்மை வற்புறுத்தினால் தாம் தற்கொலை செய்துகொள்ளப் போவதாகவும் சொல்லிவிட்டாள். மாப்பிள்ளை வீட்டார் இந்த சங்கடத்தை உணர்ந்து மெதுவாக ஒருவர் பின் ஒருவராக நழுவி விட்டனர். ஆனால் மாப்பிள்ளையாக வந்த அந்தக் கிழவர் மட்டும் அந்த இடத்தைவிட்டு அசையவே இல்லை. பிறகு அவருக்கு எதிரேயே அந்தப் பெண்ணுக்கு இன்னொரு மாப்பிள்ளையைக் கலியாணம் செய்துவைக்கப் பெற்றது. கலியாணச் சடங்குகளில் பெரும்பாகம் அன்று முடிந்துவிட்டபடியால் அன்றைக்குக் கலியாணத்தை நிறுத்தாமல் நடத்திவிட வேண்டுமெனப் பெண்ணின் பெற்றோர்கள் முடிவு செய்தனர். எனவே அதற்கிணங்க வரன்தேட ஆரம்பித்தனர். ரஸ்தாவுக்கருகில் ஒருபாயில் படுத்துறங்கிக் கொண்டிருந்த ஒரு மாணவனை எழுப்பி அவனது பெற்றோரின் அங்கீகாரம் பெற்று அவனுக்கு அப்பெண்ணைப் பாணிக்கிரகணம் செய்துகொடுத்தனர். பொழுது விடிந்ததும் தம்பதிகள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர். அப்போதும் கிழவர் அங்கேயே இருந்தார்.

### கராச்சி கார்ப்பரேஷன் தலைவர் தேர்தல்

#### காங்கிரஸ்காரர் தோல்வி

கராச்சி மேயர் தேர்தல் மே 9உ நடந்தது. காப்பரேஷனில் நெடுங்காலமாக அங்கத்தினராக இருக்கும் கான்பகதூர் ஏ. எச் மாமா மேயர் பதவிக்குத் தெரிந்தெடுக்கப்பெற்றார். இவருக்கு 33 ஓட்டுகள் கிடைத்தன. இவருடன் போட்டியிட்ட ஜில்லா காங்கிரஸ் தலைவர் மிஸ்டர் கித்வாயுக்கு 24 ஓட்டுகளே கிடைத்தன.



## இத்தாலிப் பிரதிநிதி வெளியேற்றம்

மே 11உ பன்று சர்வதேச சங்க நிர்வாகசபையில் அந்தரங்கக் கூட்டமொன்று நடைபெற்றது. அபிஸீனிய பிரதிநிதியான மிஸ்டர் லால்தே மேரியம் கூட்டத்திற்கு வந்திருந்தார். இத்தாலியப் பிரதிநிதி அலாயிஸி பிரபு, மேரியம் இருப்பதைப் பார்த்ததும் பின் வருமாறு கூறிவிட்டு வெளியேறினர்:-

அபிஸீனியாவின் பிரதிநிதி யென்று சொல்லிக்கொண்டு இங்கே உட்கார்ந்திருப்பவரெதிரில் நான் உட்கார முடியாது. அபிஸீனியாவில் இப்போதிருப்பது இத்தாலிய சர்க்கார் ஒன்றுதான். ஆகவே தகாரைப் பற்றி இங்கே பேசிப் பயனில்லை. நான் அவ்விவாதத்தில் கலந்துகொள்ளமாட்டேன்.

மிஸ்டர் மேரியம் கொஞ்சநேரமிருந்து அபிஸீனியப் பிரச்னைகளைப்பற்றி சில விஷயங்கள் கூறினர். மற்றப் பிரச்னைகளைப்பற்றி யாலோசிப்பதற்காகச் சபையின் பொதுக்கூட்டம் நடந்தபோது மிஸ்டர் அலாயிஸி வந்துவிட்டார்.

### பொம்மைக் கார்டுகள்

கார்டுகளில் விலாச புறப் பாதியில் படங்களை அச்சிடுவதென்று தபால் இலாகா அதிகாரிகள் முன்பு முடிவு செய்திருந்த விஷயம் நேயர்களுக்குத் தெரியும். கவர் விலை அதிகமாக இருந்து வருவது காரணமாக அதை உபயோகிக்கச் சக்தியில்லாதவர்கள் இவ்வாறு படம்போட்ட கார்டுகளை வாங்குவதால் மேலும் அசௌகர்யப்பட வேண்டியதாயிருக்கு மென்று குமரனிலும் முன்பு எழுதப்பட்டது. எல்லாக் கார்டுகளிலும் பொம்மைகளை அச்சிடத் தபால் இலாகாவுக்கு உத்தேசமில்லை யென்றும் சாதாரணக் கார்டுகளுடன் பொம்மைக் கார்டுகளும் விற்கப்படு மென்றும் அதிகமான இடத்தை வேண்டுபவர் சாதாரணக் கார்டுகளையே வாங்கலாமென்றும் தபால் இலாகாதார் அறிவித்திருப்பதாகத் தெரிகிறது.

### வேலூர் துரோகம்

#### மெம்பர்கள் ராஜீநாமா

வேலூர் ஜில்லா போர்டுத் தேர்தலில் காங்கிரசுக்கு துரோகம் செய்யப்பட்டதையும் காங்கிரஸ் கட்சியினர் ஒழுங்கீனமாய் நடந்துகொண்டதையும் ஜனங்கள் அறிவர். சில குறிப்பிட்ட நபர்கள் பேரில் எவ்வளவு பலத்த சந்தேகமிருந்தாலும் துரோகம் செய்தவர் இன்னார் தானென்று சந்தேகமறச் சொல்வது கடினமாயிருக்கிறது. எனவே வேலூர் ஜில்லா போர்டு காங்கிரஸ் கட்சி கலைக்கப்பட்டுவிட வேண்டுமென்றும் தங்களுடைய போர்டு ஸ்தானங்களை ராஜீநாமாச் செய்துவிட வேண்டுமென்றும் மாகாண காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது. அதற்கிணங்க இதுவரை 21 மெம்பர்கள் ராஜீநாமாச் செய்திருக்கின்றனர்.

### பெட்ரோல் விலை இறக்கம்

மே 8-ந் தேதியன்று சென்னையில் பெட்ரோல் விலை ஒரு ரூபாயிலிருந்து 15 அணவுக்கு இறங்கிவிட்டது இதைப் பர்மா ஷெல் கம்பெனிக்காரர் குறைத்திருக்கின்றனர்.

(1-ம் பத்தி தொடர்ச்சி)

கமிட்டி மெம்பர் சர். ஆண்ட்ரூ மாக்வேடியன் என்பவர் தெரிவிக்கிறார்.

### ரப்பர் விலை சிங்கப்பூர்

| | | | |
|---|---|---|---|
| ஏப்ரல் | 28உ | $ | 35—33 |
| | 29உ | ,, | 34—50 |
| | 30உ | ,, | 35—17 |
| மே | 1உ | ,, | 43—67 |
| | 2உ | ,, | 34—83 |
| | 4உ | ,, | 34—67 |



## செட்டியார்கள் ரிக்ரியேஷன் கிளப்

காரைக்குடி, மே 6

இன்று மாலை 5 மணிக்கு 1-வது ஆண்டு8-வது மாதக்கூட்டம்தலைவர்சுப. வெ. வெங்கிடாசலஞ்செட்டியாரவர்கள் தலைமையில் கூடியது. காரியதரிசியால் கணக்கு வாசித்து ஒப்புக்கொள்ளப் பெற்றது. புதிதாகச் சேர்ந்த மெய. ஆ. முத்துக்கருப்பஞ் செட்டியார் பனை மெ. மெ. பழ. வெங்கிடாசலஞ்செட்டியார் இருவரையும் மெம்பர்களாக அங்கீகரிக்கப்பெற்றது. சேர்ந்தாற்போல் 3 மாத சந்தா செலுத்தாத மெம்பர்கள் இருவரையும் அவர்களது ராஜிநாமா லெட்டர் படியும், கிளப் பொதுவிதியின்படியும் அங்கத்தினர் பதவியிலிருந்து நீக்கப்பெற்றது. கிளப்பிலிருந்து கவர்மெண்ட் செக்ரெட்ரி,லாஜெனரல்டிபார்ட்மெண்டு சென்னை, ஜாயிண்ட் மாஜிஸ்திரேட் தேவகோட்டை, ஜில்லா கலெக்டர் ராமநாதபுரம், தாலூகா மாஜிஸ்திரேட் திருப்பத்தூர், டிராபிக் சூப்பிரெண்ட் S. I. R. திருச்சி, ஸ்டேஷன் மாஸ்டர் S.I.R. காரைக்குடி, ஜெனரல் போஸ்ட் மாஸ்டர் சென்னை, போஸ்ட் மாஸ்டர் காரைக்குடி, போஸ்டல் சூப்பிரெண்ட் புதுக்கோட்டை, காரியதரிசி நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கம் ரெங்கூன், மானேஜிங் டைரெக்டர் S. I. R. கார்டிங் ஏஜன்ஸிகாரைக்குடி இவர்கள் கடித நகலும் புதுக்கோட்டை போஸ்ட் இன்ஸ்பெக்டர், டிராபிக் சூப்பிரெண்ட் S. I. R. திருச்சி, ராம. மெய்யப்பா, தேவகோட்டை இவர்களிடமிருந்தும் வந்த லெட்டர்களும் படித்து ரிக்கார்டு செய்யப்பெற்றன. நியூ டவுன் ரொடு லைட்டு வசதி விஷயமாய் மீண்டும் முனிஸிபல் கமிஷனருக்கு பதில்அனுப்ப வேணுமென்ற செக்ரெட்டரி யின்குறிப்பு ஒத்திவைக்கப்பெற்றது. கூடிய சீக்கிரத்தில் கிளப்பின் சார்பில் பாட்மெண்டன், காரம்போர்டு டவுன் டோர்ன்மெண்டு நடத்துவதென்று தீர்மானித்து அதற்கு தலைவர் சு. ப. வெ. வெங்கிடாசலஞ் செட்டியார் 1, பனை. மெ. மெ. பழ. வெங்கிடாசலஞ் செட்டியார் 2, சேவு. க. மு. முத்தையா செட்டியார் 3, ஆரு. பழ. சி. பழ. சிதம்பரஞ் செட்டியார் 4, வெ. மு. லெ. செ. ராமசாமி செட்டியார் 5, ஆகியவர்கள் கொண்ட ஓர் கமிட்டி நியமிக்கப்பெற்றது. காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறக் கூட்டம் இரவு 8-30 மணிக்கு இனிது நிறைவெய்தியது. அப்பால் உயர்ந்த முறையில் நிலா போஜனம் நடைபெற்றது என்று காரியதரிசி சு. மு. பழ. நாச்சியப்ப செட்டியார் அறிவிக்கிறார்.



## யாழ்ப்பாணத்தில் ராணி சீதையாச்சி

சென்ற மூன்று வாரங்களாகக் கொழும்பில் சுற்றுப்பிரயாணம் செய்து வரும் செட்டிநாடு ராஜா கனம் அண்ணாமலை செட்டியாரவர்களும் ராணி சீதையாச்சி யவர்களும் மே 7உ இரவு யாழ்ப்பாணத்துக்குப்பிரயாணமாயினர். அவர்களோடு இரண்டாவது குமாரராகிய ஸ்ரீமான் ராமநாதன் செட்டியாரவர்களும் சென்றிருக்கிறார்கள். இவர்களை வழியனுப்பும் பொருட்டு பல பிரமுகர்கள் கோட்டை ஸ்டேஷனில் குழுமியிருந்தனர்.

### இலங்கையில் இந்தியர்கள்

மலேயாவிலிருக்கும் இந்தியத் தொழிலாளர்களுடைய நிலைமையைப்பற்றிப் பரிசீலனை நடத்துவதன் நிமித்தம் இந்திய சர்க்கார் ஒரு கமிஷனை யனுப்பத் தீர்மானம் செய்திருக்கிறார்கள். அதே கமிஷனைக் கொண்டு இலங்கையிலிருக்கும் இந்தியத் தொழிலாளர்களது நிலைமையையும் பரிசீலனை செய்யச் சொல்ல வேண்டுமெனக் கோரி சென்னை அயல்நாட்டு இந்திய சங்கத்தார் இந்திய சர்க்காருக்கு ஒரு மகஜரை சமர்ப்பணம்செய்திருக்கிறார்கள்.

மேற்படி மகஜரில் இலங்கையிலுள்ள இந்தியத் தோட்டத் தொழிலாளர்களின் குறைகள் விளக்கமாக எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. தவிர கங்காணி முறை கைவிடப்படுதல், தோட்டங்களை வருடத்திற் கொருமுறையாவது அதிகாரிகளைக் கொண்டு மேற்பார்வையிடச் செய்தல், கூலியை இப்பொழுதைக் காட்டிலும் 10% அதிகரிக்கப்பட்டு அதிகரிக்கப்படும் தொகையை வேலையில்லாத் திண்டாட்ட நிவாரணம், பணியாளார் நிவாரணம் முதலியவைகளுக்காக ஒதுக்குதல் தொழிலாளர் கடன் பளுவைக் குறைக்க ஏற்பாடு செய்தல், வாசஸ்தல வசதி, கல்வி வசதி ஆகியவற்றை வற்புறுத்தல் போன்ற பல விஷயங்கள் அந்த மகஜரில் வற்புறுத்தப்பட்டிருக்கின்றன.

## நேஷனல் மூவிடோன் மீது வழக்கு

### மதுரை ஒரிஜினல் பாய்ஸ் தாவா

#### ரூ. 20,000 நஷ்ட ஈடு தேவை

நேஷனல் மூவிடோன் கம்பெனியாரிடமிருந்து தங்களுக்கு வரவேண்டிய பணமும் நஷ்ட ஈடுமாக சேர்ந்து 20,000 ரூபா வரவேண்டும் என்று மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியார் சென்னை ஹைக்கோர்ட்டில் ஜஸ்டிஸ் லக்ஷ்மணராவ்முன் ஒரு தாவாக் கொண்டுவந்தார்கள்.

"பதிபக்தி" என்னும் தமிழ்ப்படத்தினுடைய 'நெகடிவ்'வை நேஷனல் மூவிடோன் கம்பெனியிலிருந்து கைப்பற்றவும் ஒரு மனுக் கொடுக்கப்பட்டு, அதன் பேரில் கைப்பற்ற உத்திரவு கொடுத்து, கோர்ட்டு கமிஷனர் அதை நேற்றிரவு சுமார் 12 மணிக்குக் கைப்பற்றிக்கொண்டு வந்துவிட்டாரென்று தெரிகிறது.

### தனவைசிய இளைஞர் சங்கம் கொழும்பு

#### ராஜா சர் நன்கொடை

கொழும்பு 7உ

இங்கர் விஜயம் செய்துள்ள கனம் டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரவர்கள், மேற்படி தனவைசிய இளைஞர் சங்கத்தின்பால் பேரன்பு கொண்டு இன்று நூறு ரூ. (ரூ. 100) நன்கொடையளித்தார்கள். அப்பேருதவிக்கு அன்னாவர்கட்கு மிகுதியும் வந்தனம் கூறுவதாக மேற்படி சங்கக்காரியதரிசி அறிவிக்கிறார்.



## பிரிவுபசார விருந்து

(ஒரு நிருபர்)

கோலாலம்பூர் தனவைசிய பள்ளிச் சிறார்களுக்கு ஆங்கிலம் கற்பிக்கும் திரு. எஸ். எஸ். அய்யங்காரவர்கள் தாய்நாடு செல்லுவதை முன்னிட்டு 27-4-36 மாலை ஓர் சிறந்த விருந்து, உயர்திருவாளர் கா. நாச்சியப்ப செட்டியாரவர்கள் அளித்தார்கள். திரு. அய்யங்காரவர்கள் ஆங்கிலம் கற்பிப்பதில் மிகுந்த தேர்ச்சி வாய்ந்தவர்கள் அன்னார் பல சீனப் பையன்களுக்கும் ட்யூட்டராயிருந்ததற்கு சீனப் பையன்கள் 23-4-36-லிருந்து 27-4-36 காலை முடிய சிற்றுண்டி தேநீர் விருந்துகள் உவந்தளித்து ஞாபகார்த்தமாகப் பல விலையுயர்ந்த சன்மானங்களும் வழங்கினர்கள். தனவைசியப் பெரியார்களில் பலர் ஞாபகார்த்தமாகப் பல விலையுயர்ந்த சன்மானங்களும், வழங்கி பொருளுதவி செய்யவே, அவற்றைப்பெற்று திரு. அய்யங்காரவர்கள் 27-4-36 இரவு 10 மணிக்குச் சிங்கப்பூர் மெயிலில் பிரயாணமானர்கள். அன்றிரவு பல சீன மாணவர்களும் சீக்கிரம் பிரயாணமானதாலேசிலதனவைசிய ஆன்றோர்களும் ரயிலடிவந்திருந்தனர். பிளேட்பாரத்தில் உயர்திருவாளர் மு. சீனிவாசனவர்கள் தமிழில் அரியதோர் பிரசங்கமாரி பொழிந்து, கனம் அய்யங்காரவர்களின் உயரிய தன்மையையும் குணநிசயங்களையும் நலம்படவுரைத்து சுகமாகத் தாய்நாடேகவும் குறைவற்ற செல்வத்துடனும், நீடூழி வாழவும் இறையை வணங்குவதாகச் சொல்லி ஓர் மல்லிகை மலர்மாலை யணிவித்தார்கள்.

### புது வருட உத்தியோகஸ்தர்கள்

2-ந் தேதி கொழும்பில் நடைபெற்ற இலங்கை நாட்டுக்கோட்டை செட்டியார்களின் வர்த்தக சங்க ஆண்டுவிழாவில் கீழ்க்கண்ட பிரமுகர்கள் புதுவருட உத்தியோகஸ்தர்களாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.

தலைவர்:— திரு. செ. ராம. வள்ளியப்ப செட்டியார்.

உபதலைவர்:— திரு. அழ. வீர. பெ. அண்ணாமலை செட்டியார்

காரியதரிசி:—திரு. அரு. அ. அடைக்கப்ப செட்டியார்

உப காரியதரிசி:—திரு. உஅ. உக. அ. ராம. அரு. குமரப்ப செட்டியார்.

பொக்கிஷதார்:—திரு. வயி. மு. ராம வயிரவன் செட்டியார்.

கணக்குப் பரிசோதகர்:—திரு. சுப. கா. காசிவிஸ்வநாதன் செட்டியார்.

# கமலாவின் காதல்

அல்லது

## கருணாகரனின் மீட்சி

(எஸ். டி. சுப்பிரமணியம்.)

புனிதம் நிறைந்த பூங்காவின் செடிகளில் பலவர்ண மலர்கள் பாங்குறச் செழித்து, பார்ப்போர் விழிகளைப்பற்றிக் கவர்ந்து அருகினில் வா! வா! வென்றழைத்தும் நலந்தரும் தென்றலால் அந்நறுமண மலர்கள் தன்பரிமளத்தை மக்களின் நாசியுள்பரிவுடன் புகுத்தி உள்ளத்தைக் கொள்ளையிட்டுக் கொண்டிருந்தன.

அம்மனோகரப் பூங்காவில் யௌவனத்தின் சோபை கிரம்பிய ஓர் பெண்மணி உன்னதச் செயற்கையாலாக்கப்பட்ட ஊஞ்சலிலமர்ந்து தன் கரத்திருந்த யாழினை மீட்டி அம்மின்னாளின் தொனியை அத்துடன் இணைத்து அறப்பொருளினை அகத்தினிலிருத்தி அன்பொழுக மனமுருக கானம் செய்தனள்.

அக்கானத்தின் இனிமை செவிகளின் வழியாய் உள்ளத்திற் புகுந்து உவகையளித்தன. அடிமை இனங்களை அலட்சியம் செய்து ஏகவெளியினில் ஏகாந்தமாய்ச் சென்ற புள்ளினக் கூட்டங்கள் நம்மடமயிலாள் நல்லிசைக்கானத்திற் சிக்கி, நாங்களும் அடிமை நாங்களும் அடிமை யென நன்மணியாளிடம் சரண்புகுந்தன.

அங்ஙன மிருக்க அம்மணி! எனும் அபய ஒலம் கலந்த குரல் கேட்டுத் திரும்பினள். தன் உயிர்ப்பாங்கியின் கண்ணிரு விழிகளில் ஜலம் கொட்டக் கண்டனள். அப்பாங்கியை நோக்கி என்னடி வனஜா ஏன்? இந்தக்கோலம் உனக்குற்ற தீங்கெதுவோ! என்றனள்.

வனஜா:—தீங்கெனிலோ மிகப்பெரிது.

அச்செல்வி:—பீடிகை வேண்டாம் உண்மை யுரைப்பாய்.

வனஜா:-உம்-உம்-நாவெழவில்லையே.

அச்செல்வி:-பதட்டத்துடன் ஏதடி பிரமாதப் படுத்துகிறாய் விரைவிற் கூற மாட்டாயா?

வனஜா:—அம்மா உங்கள் மெய்க்காதலர் கருணாகரர் இருந்தனரே (இடைமறுத்து)

அச்செல்வி:—ஆம் என்காதர் கருணாகரர் அவருக்கென்னடி இருந்தனரே எனக் கூறுகிறாயே. ஏன் இப்பொழுதும் இருக்கவில்லையா? ஏண்டி என்னிடம் பரிகாசம் செய்கிறாயா என்ன?

வனஜா:—நான் பரிகசிக்கவில்லையம்மா, உங்களின் பெற்றோர் உடன்பிறந்தோரனைவரும் உங்களை வேறொரு தனவந்தருக்கு மணம் செய்விக்க எண்ணி அதற்கிடர் நேராவண்ணம் கண்ணியம் நிறைந்த கருணாகரரைப் படகினில் ஏற்றி ஆற்றின் பிரவாகச் சுழியில் அமிழ்த்தி விட்டு வந்தனராம்.

அச்செல்வி:—என்ன? என்ன? என் உயிரனைய காதலர் கருணாகரர் இறந்தனரா? இப்பேதையை விடுத்துப் பிரிந்தனரா? சண்டாள மூர்க்கர்கள் இச்சதியினைச் சற்றும் இரக்கமற்று இயற்றினரா! ஐயோ தெய்வமே. நான் மகாபாவி. அபாக்யவதி. என்னாலன்றோ அவ்வுத்தம சீலர் உயிர்நீத்தார். ஆம் ஆம் முற்றும் உண்மை. ஆனால் என்னை ஏமாற்றித் தனியே தத்தளிக்கச் செய்து சென்றது துரோகமல்லவா! அன்று அன்று. அன்னவரின் கதி எதிர்பாராதன்றோ? ஆவி அகலும் தருணத்திலும் மணாளன் முன் என் உருவமே பிரதிபலித்திருக்கும். என் உயிரிலை அகன்றபின் உடல் என்னும் உபயோகமற்ற ஜடத்தை ஏன் சுமந்து திரியவேண்டும். கனிவு மிகுந்த காதலா. இதோ உம்மை வந்தடைகிறேனென மூர்ச்சித்துப் பூமியில் சாய்ந்தாள்.

கருணாகரன் நற்குலத்தில் ஜெனித்து பொற்குவியலில் புரண்டவன். அழகின் உருவாய் அவதரித்து நலம்படக் கல்வி பயின்றவன். சத்திய நெறியினைக் கடைப்பிடித் தொழுகும் சற்குண சீலன். இவ்வுத்தமனை அடைந்த பெற்றோர்கள் சித்தமகிழ்ந்து இவனுக்குற்ற ஓர் துணைவியைத் தேடினர். மங்கைப் பெற்றோர்களில் அனேகர் ஒருவர் பின் ஒருவராய் போட்டியிட்டலைந்தனர். கருணாகரனின் கருத்திற்கிணங்க அழகும், குணமும், பணமும், படைத்த ஓர் ஆரணங்கே தேர்ந்தெடுக்கப்பட்டாள். அவ்வணங்கு பள்ளியில் பயிலுங்கால் கருணாகரனின் உள்ளக்கடலையும் தன் உள்ளக்கடலையும் ஒன்றாய்ப் பிணித்துஇணைத்தவள். எனினும் குறுக்கே நின்ற அணை நெருங்கிக் கலக்கத் தடைப்படுத்தி விட்டது. இவ்வணை இடையூறாய் நின்றும் இருகடல் அலைகளும் உள்ளப்புயற் காற்றின் கொந்தளிப்பால் அணையைக் கடந்து ஒன்றோடொன்று மோதிக் கொண்டிருந்தன.

திங்கள் பல செல்லுமுன் கருணாகரனின் தந்தை வியாபாரத்தலங்களில் பெரும் நஷ்டமடைந்து கடன் தொல்லைக் காற்றாது உயிர்போக்கிக் கொண்டனர். அதற்கு மேல் ஜீவிக்க மனமற்ற அவன் மாதா தன் நாதனடி போய்ச் சேர்ந்தாள். கடன்கொடுத்தவர்களோர் உள்ள உடைமைகளனைத்தையும் கைப்பற்றிக் கொண்டனர். கதியற்ற கருணாகரன் திக்கற்றுத் தெருவில் நிற்க நேர்ந்தது.

இவையனைத்தையும் உணர்ந்த கருணாகரனின் காதலி ஹிருதயம் துடிக்க பல பல எண்ணி மனம் வெதும்பினளாயினும் தன் உறுதியான காதலை மட்டும் மறந்தாளில்லை. தன்னிடமுள்ள திரண்ட ஐஸ்வரியம் அனைத்தையும் அவன் பால் சேர்த்துவிட எண்ணினள். இதையறிந்த அவள் குடும்பத்தார் இச்சிறுமியின் காதல் பிரேமையை அகற்றி வெறொரு தனவந்தனுக்கு விவாஹம் முடித்துவைக்க எண்ணி அதற்கான பல சூழ்ச்சிகளும் செய்து பார்த்தனர். ஒன்றும் பலிக்காது போகவே இதற்கிடராய் மூலத்த கருணாகரனை வீழ்த்தி விட்டால் பெண் தங்களின் இணக்கத்திற்கு வந்துவிடக் கூடுமென நினைத்து கருணாகரனை ஏமாற்றி ஆற்றின் காற்று வாங்க படகிலழைத்துச் சென்று சுழியின் வழியாய்த் தள்ளி சனி ஒழிந்ததென எண்ணிவந்து விட்டனர்.

ஸ்மரணையற்று நிலத்தில் சாய்ந்தஅம் மாது, பணிப் பெண்கள் பலரால் இல்லத்துள் கொண்டு சேர்க்கப்பட்டனள். தனம்படைத் தோருக்குத் தலைவலி வந்திடில் பணம் பறித்திட வைத்தியர் பலர் கூடுவர் என்பதை நிரூபிப்பவர்கள் போலஅனேக பண்டிதர்கள் வந்தமர்ந்தனர். சிகிச்சைகள் பல பல செய்தும் பயன்படவில்லை. அங்கு நின்ற ஓர் வயோதிகப் பாட்டி ஜலத்தை அள்ளி முகத்தில் தெளித்து சற்று விசிறியதும் ஸ்மரணையுற்றுக் கண்களைத் திறந்தாள், அன்னவளின் மனச்சாந்தி விடைபெற்றகன்றது. மந்தகாச மிருந்த அவளது வதனம் சுருங்கிக் கறுத்தது. நெஞ்சத்தின் குமுறலில் இருந்தெழுந்த ஆவேசப் பெருக்குடன், தன் முன் நிற்கும், தந்தை தாய் தமையனை நோக்கினாள். கண்கள் கொவ்வைப் பழமெனச் சிவந்தது. கோபாக்கினி கொழுந்துவிட்டெரிய நாகப்பாம்பைப் போல் சீறிப் பின் வருமாறு புகன்றனள்.

பணப் பேயின் வசப்பட்டுப் படுகொலை இயற்றிய பாதகர்களே! தூர்க்குணங்களை சர்வமான்யமாய்க் கொண்ட தூர்த்தர்களே! உங்கள் பணமும் இக்கொடுங்குணமும் இம்மாய உலகில் எவ்வளவு நாள் நீடித்திருக்குமென எண்ணினீர்கள்! காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம் என்னும் சத்தியவாக்கை சதிசெய்யத் துணிந்த சண்டாளர்காள்! என்போன்ற இளம் பெண்களை விலைகூறி விற்க என்ன உங்கள் மனம் கல்லா? இரும்பா? கோழிக்குஞ்சை வளர்க்கும் குறவன் பொருள் கொடுத்தோரிடம் தள்ளிவிடுவதைப்போன்று பெற்றோர்கள் பெண்களை ஊட்டிவளர்த்துப் பெரும் பணந்தோனிடம் விற்று உயிர்வாழ்வது சேச்சே! வெட்கம்! வெட்கம்! இதனினும் இழிதொழில் வெறென்ன விருக்கக் கூடும். உலகில் ஜெனித்த உத்தம சிகாமணிகளே. காதலின் சக்தியைக் கற்றுத் தெளியுங்கள்! இன்றேல் எனக்குற்ற கதிதான் மிஞ்சி நிற்கும் தெய்வீகத்தன்மை வாய்ந்த காதலின் மகிமையை அறியாக் கசடர்களின் இல்லத்தில் ஜெனித்ததாலன்றோ என் மனம் கவர்ந்த மகா புருஷரை இழக்க நேர்ந்தது. இக்கொடுமைக்குப் பலியாக இதோ என் உயிரையும் தியாகம் செய்கிறேன். ஐயோ கொலை! பணத்திற்கியற்றிய படுகொலை!! என மேலும்பேச நாவெழாது தேம்பி அழுதவண்ணம் படுக்கையில் சாய்ந்தாள்.

பெற்றோரும் மற்றோரும் பிரமித்து ஆறுதல் மொழி பல கூறினர். அம்மொழிகளனைத்தும் அவளின் இதய கமலத்தை நெருப்பால் கருக்குவதுபோலிருந்தது. ஒவ்வொரு நிமிடமும் உடல் நிலை கவலைக்கிடமானதாய் மாறிக்காணப்பட்டது. பண்டிதர்கள் தங்கள் ஔடதபானங்களை சரமாரியாய்ப் பிரயோகித்தனர். என்ன பயன்? மனப்பிணி அகற்ற மருந்தினால் கூடுமோ? கூடாமலே போயிற்று. முடிவில் வைத்தியக் கோஷ்டியானைவரும் ஆற்றின் ஜலக்காற்றே மங்கையின் பிணியகற்றவல்லதெனக்கூறி விடைபெற்றகன்றனர். பெண்மணியின் பெற்றோர்கள் அதற்கு வேண்டிய முன்னேற்பாடுகள் அனைத்தும் செய்து வைத்திருந்தனர். நம் இளநங்கை தன் சேடி சகிதம் தமது வருகைக்காகக் காத்திருந்த படகின்மீதமர்ந்தாள். படகோட்டுபவன் மிகுந்த கவனத்துடன் படகைச் செலுத்தலானான்.

காதலன் மடிந்த பின் சாதலே உத்தமமெனக் கொண்ட சற்குண மங்கை மாயவாழ்வெனும் பெரிய வாரிதிச் சுழலிலிருந்துஅகன்றுவிடும்நோக்கத்துடன் ஆற்றில் குதித்துவிட எண்ணினள்.

(17-ம் பக்கம் பார்க்க)









# கொழும்பு செட்டியார்கள்சங்கம்

## ஒன்பதாம் ஆண்டு நிறைவுவிழா

### செட்டிநாடு ராஜா அவர்களின் சொற்பொழிவு

கொழும்பு மே, 7௨

இலங்கை நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத்தின் ஒன்பதாவது ஆண்டு நிறைவிழாவும், பத்தாவது ஆண்டு ஆரம்ப விழாவும் நேற்று கொழும்பு செட்டியார் வீதியிலுள்ள மேற்குறித்த சங்க மண்டபத்தில் அதிவிமரிசையாக நடைபெற்றது. அது சமயம் கனம் டாக்டர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்களும் மற்றும் பல பிரமுகர்களும் இலங்கையின் பல பாகங்களிலிருந்தும் விஜயம் செய்திருந்தனர்.

கூட்ட நடவடிக்கைகள் சிற்றுண்டி விருந்துக்குப் பின் கடவுள் வாழ்த்துடன் ஆரம்பமாயின.

முதன் முதலாக சங்கத்தலைவர் ஸ்ரீமான் சாமிநாதன் செட்டியாரவர்கள் ராஜா சர் அண்ணாமலை செட்டியாரவர்களை வரவேற்று மாலை சூட்டி உபசரித்தார்கள். பல பிரமுகர்களின் வேண்டுகோளுக்கிணங்கி செட்டிநாட்டு ராஜா அவர்கள் ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

சங்கத் தலைவர் அவர்களின் முகவுரை பிரசங்கத்தின் விபரம் வருமாறு:—

நமது சங்கத்தின் ஒன்பதாம் ஆண்டு நிறைவிழாவும், பத்தாவதாண்டு ஆரம்ப விழாவும் கொண்டாடுவதற்காக இங்கு நாம் கூடியிருக்கிறோம். இவ்வமயம் நமது ராஜா சர் அவர்கள் கலந்துகொள்ள நேர்ந்தது நமது பெரும் பாக்கியமாகும். ராஜா சர் அவர்கள் சிறந்த அறிவும் பரந்த நோக்கமும் நிறைந்த அனுபவமுமுடையவர்கள். பொருளாதாரம் அரசியல் கலாஞானம் முதலியவைகளுடன் ஐரோப்பா அமெரிக்கா முதலிய பல நாடுகளுக்கு விஜயம் செய்து உலகியல் அறிவும் நிரம்பப் பெற்றவர்கள். சமூக சீர்திருத்தத்திலே பேரார்வத்துடன் மற்றவர்களைச் செய்யத் தூண்டிய துடன் அவர்களும் செய்கையிற் செய்து காட்டியவர்கள். இத்தகைய பேரறிஞராகிய டாக்டர் ராஜா சர் அவர்கள் நமது சங்க வளர்ச்சிக்கு சமூக நலனுக்கும் உரிய பல உயர்ந்த விஷயங்களை எடுத்துக்கூறி மகிழ்விப்பார்கள் என்று நம்புகிறோம்.

ராஜா சர் அவர்கள் ஆரம்பகாலத்திலிருந்து நமது சங்கத்துக்கு போஷகராகவிருந்து நம் சங்கத்தை வளர்த்து வந்திருப்பதோடு சந்தர்ப்பம் கிடைத்தபொழுதெல்லாம் நமது சங்கத்துக்கும் நம்மவர்களுக்கும் வேண்டிய உதவிகளைச் செய்து கொண்டு வந்திருக்கிறார்கள். இன்னமும் இதே போன்று அவர்கள் எப்பொழுதும் செய்து வருவார்களென்று எதிர்பார்க்கிறோம். அவர்களுக்கு திடகாத்திரத்தையும் நீண்ட ஆயுளையும் எல்லாவிதமான நலன்களையும் அருளுமாறு சர்வ வல்லமையுள்ள கடவுளைப் பிரார்த்திக்கின்றேன். (கரகோஷம்)

அப்பால் காரியதரிசி ஸ்ரீமான் லெ. அழகு சுந்தரம் செட்டியாரவர்கள் வருடாந்த அறிக்கை வாசித்தார்கள்.

பின்னர் ஸ்ரீமான் செ. ராம. வள்ளியப்ப செட்டியார் "வீரகேசரி" அதிபர் ஸ்ரீமான் பெ. பெரி. சுப்பிரமணியம் செட்டியார் ஆகியோர், அண்ணாமலை சர்வகலாசாலை ஸ்தாபகராகிய ராஜா சர், அண்ணாமலை செட்டியாரவர்களின் அரிய சேவைகளைப் பாராட்டி ருசிகரமான சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்

தனவைசிய இளைஞர் சங்கத்தைச்சேர்ந்த திரு. எஸ். முத்துராமன், சங்கங்களின்பயன் என்னும் விஷயம்பற்றியும், திரு எம். ஆர். சேதுராமன் இளைஞர்களும், தற்போதைய கல்வி முறையும் என்னும் விஷயம்பற்றியும் திரு வி. ராமநாதன் சீர்திருத்தம் கல்வி முதலிய விஷயத்தைக்குறித்தும் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அடுத்தபடியாக கனம் டாக்டர் ராஜா சர். அண்ணாமலை செட்டியாரவர்கள் பலத்த கரகோஷத்தினிடையே எழுந்து நிகழ்த்திய சொற்பொழிவின் விவரம் வருமாறு,—

கனவான்களே!

உங்களின் சார்பாக இலங்கை நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத் தலைவர் ஸ்ரீமான் சாமிநாதன் செட்டியாரவர்களும் காரியதரிசி ஸ்ரீமான் அழகுசுந்தரம் செட்டியாரவர்களும் என்னிடத்தில் மிகவும் அன்பு பாராட்டி இனிமையான வார்த்தைகளினால் நல்வரவு கூறியதற்கு எனது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன்.

தனவைசிய இளைஞர்கள் என்னிடத்தில் அன்பு பாராட்டி நல்வரவு கூறியதற்குஎனது மனமார்ந்த வந்தனத்தைச்செலுத்துகிறேன்.

முதலாவதாக நான் சொல்ல விரும்புவது நமது சமூகத்தாரின் நலம் கருதி அமைக்கப்பெற்றுள்ள இந்த சங்கத்தை எல்லாவகையாலும் பலப்படுத்துவதற்கு இலங்கையிலுள்ள நமது இனத்தார் ஒவ்வொருவரும் அதிக முயற்சியெடுத்துக்கொள்ளவேணுமென்பதேயாகும்.

சங்கத்தினால் ஏற்படக்கூடிய பலன் என்னவென்று சிலர் கேட்கக்கூடும். நம் முன்னோர் காலத்தில் நம்முடைய வியாபார நடவடிக்கைகளுக்கு வேண்டும் உதவியை இத்தகைய சங்க ஸ்தாபனங்களின் மூலமாக பெறவேண்டுவதவசியமில்லாமலிருந்தது. தற்காலத்தில் அரசியல் நடவடிக்கைகள் அடிக்கடி மாறுதல்களை அடைகின்றன. தேச மக்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக அரசியலில் உரிமைகள் கொடுக்கப்பெற்று வருகின்றன. ஒவ்வொரு தேசத்திலும் அந்நியநாட்டாருக்கு உரிமை கொடுப்பதற்கு இஷ்டமில்லாமல் எல்லாவகையான சுதந்தரமும் தங்களுக்கே இருக்கவேண்டுமென எண்ணம் உண்டாகியிருக்கிறது. நம் இனத்தார் இந்தியாவில் பிறந்து வளர்ந்ததினால் இந்தியா நமக்கு சொந்தத்தேசமாக இருக்கிறது.

ஆனால் நம்முடைய லேவாதேவித் தொழிலும் வியாபாரமும் பெரும்பாகம் நீண்டகாலமாக அந்நிய நாடுகளிலேயே நடைபெற்று வருகின்றன. அந்நிய நாடுகளில் நீண்டகாலமாக நம்முடைய வியாபாரங்களுக்கு இடையூறும் பற்பல விதமான சட்டதிட்டங்களும்ஏற்பட்டுவருவதன் காரணமாக நமது சொந்த தேசமாகிய இந்தியாவிலேயே நம்முடைய வர்த்தகத்தை அதிகமாக்கிக் கொள்ளவேண்டுமென்று நம்மில் அநேகருக்கு எண்ணம் உண்டாகியிருப்பதும் அதை அநுசரித்து தொழிற்சாலைகள் பல அமைக்கப்பெற்று வருவதும் நாம் எல்லோம் அறிந்ததே யாகும். அந்நிய நாடுகளிலுள்ள இடையூறுகளை நினைத்தோ அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ நமது தாய்நாடாகிய இந்தியாவில் நமது ஐசுவரியப் பெருக்கத்துக்கு வேண்டுவனவற்றை தற்கால முறைகளை அனுசரித்து நாம் செய்யவேண்டியது அவசியமென்றே நானும் நினைக்கின்றேன். உலகத்தில் பற்பல பாகத்திலும் லேவாதேவி யென்ற வட்டித் தொழிலுக்கு இடையூறாக அங்கங்கே சட்டதிட்டங்கள் ஏற்பட்டு வருவதால் இனி நாம் வேறுவகையான தொழில்களைத் தான் செய்யவேண்டுமென்று நம்மில் பலர் அபிப்பிராயம் கொண்டிருக்கின்றார்கள். தொன்றுதொட்டு நம்மினத்தார் நடத்திவந்த தொழிலை முற்றிலும் நிறுத்துவது சரியாக மாட்டாதென்பது எனது துணிபு. வட்டித்தொழில் செய்கிறவர்களிடத்தில் அவசியமான அளவோடும் இல்லாமல் அளவுக்கு மேற்பட்ட துவேஷத்தை ஜனங்கள் காட்டிவருவதும் அதை அனுசரித்து அவசியமும் நியாயமும் இல்லாத சட்டதிட்டங்கள் ஏற்படுவதும் தேச நன்மைக்குப் பெரிதும் கெடுதல் என்று நான் சொல்லுவேன். ஒரு தேசம் இயற்கையில் எத்தனை வளம் பொருந்தியதாக இருந்தபோதிலும் அதை உபயோகமாக்குவதற்கு விவசாயமும் வர்த்தகமும் இன்றியமையாததென்பதும் அதற்குப் பணம் கொடுக்கல் வாங்கல் ஆகிய லேவாதேவி அவசியமென்பதும் ஒருவரும் மறுக்கமுடியாதவைகளாகும். ஆகவே எத்தனை இடையூறான சட்டதிட்டங்கள் ஏற்பட்டபோதிலும் வட்டித்தொழில் என்றும் நிலைத்திருக்கும் என்பது நிச்சயம். நமது நாட்டுக்கோட்டை நகரத்தார் தொன்றுதொட்டு லேவாதேவித் தொழில்நடத்தி அதனால் பெரும்பலனையும் அடைந்திருப்பவர்களாகையால் அதை முற்றிலும் கைவிடுவது பிசகாகும், மற்ற தேசங்களைப் போல இந்தியாவிலும் சட்டதிட்டங்கள் ஏற்பட்டும் இனி ஏற்படக் கூடியதாயும் இருப்பதால் நமது வர்த்தகத்

(16-ம் பக்கம் பார்க்க)

# பிள்ளையார் கோவிலை இடிக்கக்கூடாது

## ஹிந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்கும் வழக்கு

(நமது நிருபர்)

காரைக்குடி மே 10

சிவகங்கை ஜில்லா முன்சீப் கோர்ட்டில் சிவகங்கைத் தாலூகா கல்லூரணிக்கிராமம் முகம்மதியர்கள் வாதிகளாகவும், ஷை கிராமம் ஹிந்துக்கள் பிரதிவாதிகளாகவும் உள்ள O. S. 240, 250/34 வழக்குகளில் ஜில்லா முன்சீப் ஸ்ரீமான் என். ராமானுஜய்யங்கார் அவர்கள் சமீபத்தில் கூறிய தீர்ப்பின் விபரம் கிடைத்திருக்கிறது.

வழக்கின் சுருக்கம்:—கல்லூரணி கிராமத்தில் தென்கரையில் மசூதியுடன் அமைக்கப்பட்ட ஊரணி யொன்றிருக்கிறது. ஷை ஊரணியின் கிழக்குக் கரையில் ஹிந்துக்கள் ஒரு பிள்ளையார் கோவிலைக் கட்டியிருக்கிறார்கள். முகம்மதியர்கள் ஷை செய்கையை ஆக்ஷேபித்து ஷை ஊரணியும் அதன் கரைகளும் தங்களுக்கே தனித்த உரிமையானவை யென்றும், ஹிந்துக்கள் வாதி தரப்பிற்குப் பாத்தியமான இடத்தில் அக்கிரமமாகப் பிரவேசித்துப் பிள்ளையார் கோவிலைக் கட்டியிருப்பதாகவும் ஷை கோவிலை இடித்து ஷை இடத்தை பூர்வஸ்திதியாக்குவதன் பொருட்டு ஹிந்துக்கள் பேரில் ஒரு கட்டளையான தடையுத்தரவு பிறப்புவிக்கவேண்டுமென்றும் வழக்காடுகின்றனர்.

ஹிந்துக்கள் வாதிகளுக்கு முகம்மதியர்களுக்கு ஊரணி அல்லது அதன் கரைகளில் தாவா எந்தக்காலத்திலும் யாதொரு பாத்தியதையும் அனுபோகமும் கிடையாதென்றும் மேற்படி ஊரணியும் அதன் கரைகளும் தங்களுக்கே தனித்த பாத்தியமானவையென்றும் எதிர் வழக்காடினர்.

வாதிகள் தரப்பு சாக்ஷிகளில் ஒருவர், வாதிகள் தரப்பில் சிவகங்கை பண்டைய ஜமீன்தாரால் தம் முன்னோர்களில் ஒருவருக்கு பிரஸ்தாப இடம் இனமளிக்கப்பட்டதாக ஒரு பழமையான ஓலை இனம் தஸ்தாவேஜை ஆஜர்படுத்தினர்.

கனம் ஜில்லா முன்சீப் அவர்கள் தாவா ஓலை தஸ்தாவேஜு பிரட்டாக சிருஷ்டிக்கப்பட்டதெனத் தீர்மானித்து ஹிந்துக்களுக்கு அனுகூலமாக சிலவு துகையுடன் தீர்ப்பளித்தனர்.

ஹிந்துக்களுக்கு வக்கீல்கள் எம். ஜி. குருசாமி அய்யர், சுந்தர வியாஸ் ஆகியவர்களும் முகம்மதியர்களுக்கு எஸ். கிருஷ்ணசாமி, அய்யர்: எம். எம். ராமலிங்கய்யர், என். சுப்பிரமணிய அய்யர் ஆகியவர்களும் ஆஜரானார்கள்.

## கொலை வழக்கு தள்ளப்பட்டது

(நமது நிருபர்)

காரைக்குடி, மே 8-

வக்கீல் ஸ்ரீமான் எம். ஜி. முகுந்தராஜய்யங்காரின் சகோதரர் ஸ்ரீமான் அய்யனய்யங்கார் என்பவர் சிவகங்கையில் சென்ற டிஸம்பர் மாதத்தில் கொலை செய்யப்பட்டது சம்பந்தமாக போலீசாரால் எடுத்துக்கொள்ளப்பட்ட வழக்கு கண்டுபிடிக்கப்படாதவையாகத் தள்ளப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. உள்ளூர் மாஜிஸ்டிரேட் வசித்துவந்த ஜாகைக்கு எதிர்த்த ரசகில் நடு டவுனில் ஷை கொலை நடந்திருந்தும் ஷை கொலை கண்டுபிடிக்க முடியாதவையென தள்ளப்பட்டிருப்பதால் டவுனில் மிகுந்த பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது.

## மாதம்பை

செல்வ விநாயகர் கலாசாலையின் முதலாம் ஆண்டு நிறைவுவிழா வைபவம் நிகழும் தாதுஆண்டு சித்திரைத்திங்கள் இருபத்தாரும் நாள் (8-5-36) வெள்ளிக்கிழமை மாலை 4-30மணிக்கு. சிலாபம் பிரபல அட்வகேட் ஸ்ரீமான் எஸ். ஆலாலசுந்தரம் அவர்கள் தலைமையில் நடந்தது. கொழும்பு வீரகேசரி அதிபர் திருவாளர் பெ.பெரி. சுப்பிரமணியம்செட்டியார் அவர்களாலும் வீரகேசரி ஆசிரியர் வ. ராமசாமி அய்யங்கார் அவர்களாலும் கொழும்பு தனவைசிய இளைஞர்சங்கத் தலைவர் முரு. சேதுராமன் அவர்களாலும் உபன்யாசிக்கப் பெற்று காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறி விழா இனிது நிறைவேறியது.

# டாக்டர் அன்சாரி காலமானார்

## நாடெங்கும் துக்கம்

## 17௳ அன்சாரி தினம்

புதிய டில்லி மே 10

வைத்தியத் தொழிலில் கீர்த்திபெற்றவரும், பிரபல காங்கிரஸ் தலைவரும், முஸ்லீம் நண்பருமான டாக்டர் அன்சாரி முஸௌரியிலிருந்து டில்லிக்குத் திரும்புகையில் இன்று காலை ரயிலிலேயே மாரடைப்புக் காரணமாக இறந்து போனார். ரயில்வே அதிகாரிகள் டெலிபோன் மூலம் இச் செய்தியை அவரது குடும்பத்தாருக்கு அறிவித்தார்கள். பிரேதத்தை என்னசெய்வதென்றும் கேட்டார்கள். பிரேதத்தை டில்லிக்குக் கொண்டுவர உடனே ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

டாக்டர் அன்சாரியின் விருந்தினரான மிஸஸ் கெல்லி அவரோடு டேராடூனிலிருந்து பிரயாணம் செய்தார். அவர் மரணம் நேர்ந்த விதத்தைப் பின் வருமாறு அறிவித்தார்:—பிஜ்ஜர் என்ற ஸ்டேஷனுக்கருகில் வண்டி வருகையில் டாக்டர் அன்சாரி தமது மார்பு வலிப்பதாகச் சொல்லி மருந்து வேண்டினார். ஆனால் அங்கு மருந்தொன்றும் கிடைக்கவில்லை. அவர் அரைமணி நேரம் படுக்கையில் இருப்புக் கொள்ளாமல் புரண்டு கொண்டேயிருந்தார். இரவு சுமார் 12 மணிக்கு உயிர் போய்விட்டது. இன்று காலை 6 மணிக்குப் பிரேதம் அந்தவண்டியிலேயே டில்லிக்குக் கொண்டுவரப் பட்டது. ஸர். அப்துரஹிமான், டாக்டர் சாகிப் ஹுசேன் போன்ற பிரபலஸ்தர் பலர் ஸ்டேஷனுக்கு வந்திருந்தனர். அவர்கள் பிரேதத்தை "தர்யகஞ்" என்ற இடத்திலுள்ள டாக்டர் அன்சாரியின் வீட்டிற்கெடுத்துச் சென்றனர். அங்கு ஏராளமான ஜனங்கள் வந்து பிரேதத்தைத் தரிசித்தனர். பின்பு பிரேதம் ஒரு பெட்டியில் வைக்கப்பட்டு ஜிம்மாமசூதிக்கு எடுத்துச் சென்றனர். அங்கு பிரார்த்தனை நடந்தது. அதன் பின் அலங்கரிக்கப்பட்ட ஒரு மோட்டாரில் பிரேதம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. சுமார் 40 மோட்டார்கள் அதன் பின் சென்றன. அன்சாரி மிக்க அன்புடன் நேசித்த முஸ்லீம் தேசிய சர்வகலாசாலைக்கு அருகில் அவரது பிரேதம் புதைக்கப்பட்டது.

### வாழ்க்கை வரலாறு

ஐக்கிய மாகாணத்தில் காஸிபூரில் 1880-ம் வருஷம் பிறந்தார். அலகாபாத்திலும் நிஜாம் கல்லூரியிலும் வசித்தார். சென்னை மெடிகல் காலேஜிலும் அவர் படித்திருக்கிறார். 1900-ம் வருஷத்தில் பட்டம்பெற்று எடின்பரோ சர்வகலாசாலையில் சேர்ந்தார். டாக்டர் பரிட்சையில் தேறிப் பட்டங்கள் பல பெற்றார். லண்டன் ஆஸ்பத்திரிகளில் டாக்டராக இருந்து வேலையும் பார்த்தார். 10 வருஷம் ஐரோப்பாவிலிருந்து எடின்பரோ சர்வகலாசாலையில் உயர் தரப்பட்டம்பெற்று இந்தியாவுக்குத் திரும்பிவந்தார். அகில இந்திய வைத்திய தாதுக்கோஷடி ஒன்றை 1912-13ம் வருஷத்தில் துருக்கிக்கு அனுப்பினார். 1917-18-ம் வருஷத்தில் ஹோம் ரூல் இயக்கத்தில் அவர் மும்முரமாகக் கலந்துகொண்டிருக்கிறார். 1920-ல் அகில இந்திய முஸ்லீம் லீக் தலைவரானார். 22ல் கயாவில் நடந்த கிலாபத் மகாநாட்டில் தலைமை வகித்தார். 1927-ல் சென்னையில் நடந்த 42-வது காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தில் அவர் தலைமைவகித்தார். 1928-ல் கல்கத்தாவில் நடந்த சர்வகட்சி மகாநாட்டிலும் தலைமை வகித்தார்.

1930-ம் வருஷத்திலும் 32-ம் வருஷத்திலும் அவர் சிறை புகுந்தார். 34-35 ல் அவர் காங்கிரஸ் சட்டசபை விவகாரப் பஞ்சாயத்துத் தலைவராக இருந்தார். "நேஷனல் கால்" என்ற பத்திரிகையை டாக்டர் அன்சாரிதான் ஆரம்பித்து அதன் நிருவாக சபைக்கு இது வரை தலைவராக இருந்தார்.

டாக்டர் அன்ஸாரிக்கு ஐரோப்பிய மனைவி ஒருத்தியும் அவள் மூலமாக ஒரு பிள்ளையுமிருக்கிறார்கள். இருவரும் தற்போது இங்கிலாந்திலிருக்கின்றனர்.

மே 17௳ யன்று அகில இந்திய அன்சாரி தினமாகக் கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

## கண்டனூர்

ஸ்ரீ ராமகிருஷ்ண அஸோஸியேஷன்

மே 10௳

மாலை 4 மணிக்கு தேசியகீதம் பாடப்பெற்று சுபாஷ் தினத்தை கொண்டாடுவதற்காக N. வைத்தியநாத அய்யர் தலைமையில் கூட்டம் ஆரம்பிக்கப்பெற்றது. அவ்வமயம் சுபாஷ் பாபுவைக் கைது செய்ததைக் கண்டித்து ஓர் கண்டனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. காலஞ்சென்ற மதுரை ஸ்ரீமதி

## காரைக்குடியில் அடிஸ் அபாபா தினம்

(நமது நிருபர்)

காரைக்குடி, மே 10—

காங்கிரஸ் தலைவர் ஜவஹர்லால் நேரு அவர்கள் விடுத்துள்ள கட்டளைக்கிணங்க உள்ளூர் நகர காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் ஸ்ரீமான் எஸ். கணேசன் அவர்கள் தலைமையில் நேற்றுமாலை 6 மணிக்கு காந்திச் சதுக்கத்தில் அடிஸ் அபாபா தினம் கொண்டாடப்பட்டது.

தென்காசி ஸ்ரீமான் சுப்பிரமணிய தாஸ், தி. ம. நடராஜன், சிவப்பிரசாத் ஆகியவர்கள் இத்தாலியின் மிருகத்தனமான அக்கிரம யுத்தத்தையும் ஏகாதிபத்திய ஆசையையும் கண்டித்து அபிசீனிய மக்களுக்கு இந்தியர்கள் அனுதாபம் தெரிவித்துக்கொள்ள காரணத்தை விளக்கிக் கூறினார்கள்.

தலைவரவர் முடிவுரையில் இந்தியா மக்கள் அபிசீனியர்களிடம் அனுதாபப்படுகிறார்களென்றும் அவர்களின் சுதந்திரத்திற்காக இந்தியர்கள் கடவுளைப் பிரார்த்திப்பதாகவும் தீர்மானத்தைக் கொணர்ந்ததும் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

## சுபாஷ்பாபு தினம்

போதுக் கூட்டம்

(நமது நிருபர்)

மே, 11௳

காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களின் கட்டளைக்கிணங்க, காரைக்குடி நகரக் காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் சுபாஷ்போஸ் தினம் நேற்று மாலை 6-மணிக்கு திரு. டாக்டர் சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் காந்திச் சதுக்கத்தில் கொண்டாடப்பட்டது. பொதுக்கூட்டத்திற்கு முன் ஸ்ரீஜத் சுபாஷ்போஸின் படத்துடன் ஊர்வலம் ஒன்று முக்கிய தெருக்களைக் கடந்து காந்தி சதுக்கத்தை அடைந்தது. தலைவரவர்கள் ஸ்ரீஜத் சுபாஷ்போஸை யாதொரு காரணமும் விசாரணையுமின்றி கைது செய்து வைத்திருக்கிற சர்க்காரின் செய்கையைப் பலமாகக் கண்டித்துப் பேசிய பின்னர், ஸ்ரீமான்கள் சுப்பிரமணிய தாஸ், காஞ்சீபுரம் முகம்மது முகைதீன், சா. கணேசன், உண்ணிக்கிருஷ்ணன், என். எஸ். கணபதி, டி. எம். நடராஜன் ஆகியவர்களும் சர்க்காரின் செய்கையைக் கண்டித்துப் பேசினர்.

பின்னர் திரு. டி. எம். நடராஜன் அவர்கள் சுபாஷ்போஸை அக்கிரமமாக யாதொரு விசாரணையுமின்றி அடைத்து வைத்திருக்கும் சர்க்காரின் அதிக்கிரமச் செய்கையைக் கண்டித்துத் தீர்மானம் கொண்டுவர, கரகோஷத்துடன் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

பத்மாசனி அம்மாள், வடதஞ்சை ஸ்ரீமான் பந்துலு அய்யர் ஆகிய இருவர் பிரிவைக் குறித்தும் அனுபாபத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.





# காரைக்குடி முனிஸிபல் சபைக் கூட்டம்

## அன்சாரி மரணத்திற்கு அனுதாபம்

## கூட்டம் ஒத்திவைக்கப்பெற்றது

(நமது நிருபர்)

காரைக்குடி முனிஸிபல் சபையின் அவசர மீட்டிங் ஒன்று முன்பு குமரனில் குறிப்பிட்டிருந்தபடி மே 11௳ திங்கட்கிழமை காலை 9 மணிக்குச் சேர்மென் திரு. மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. சேர்மென் உள்பட பதினேழு மெம்பர்கள் ஆஜராயிருந்தனர்.

இக்கவுன்ஸிலில் 1936-ம் வருஷம் பிப்ரவரிமீ 10-ம் தயன்று நிறைவேறிய 72-ம் நிர். தீர்மானமாகிய பட்ஜெட் விஷயத்தில் அக்கௌண்டெட் மாறுதல், போன்ற சில உத்தியோக மாற்றங்கள் செய்திருப்பதானது 120-வது பிரிவுப்படி கவுன்ஸிலின் அதிகார வரம்பிற்கு மேற்பட்டதாக இருப்பதால், ஷை பாகங்கள் 1920-ம் வருஷத்திய மதராஸ் ஜில்லா முனிசிபாலிடிகளின் ஆக்ட் 36-வது பிரிவு 1-வது உட்பிரிவின் கீழ் ஏன் ரத்து செய்யப்படக் கூடாது என்பதற்கு கவுன்ஸிலின் முகாந்திரம் கேட்டு சர்க்கார் அனுப்பிய உத்திரவு ஆலோசனைக் கெடுத்துக்கொள்ளப்பெற்றது. பலமான விவாதம் நடைபெற்றது,

கடைசியாக 70-வது பிரிவுக்கு உட்பட்டுத்தான் சிப்பந்திகளின் சம்பளப் பட்டியல் மாற்றப்பட்டிருக்கிறதென்றும் அது சட்ட வரம்பிற்கு மீறியதாகாதென்றும் நிர்வாக அதிகாரியால் கொண்டுவரப்பட்ட பட்ஜட், எஸ்டிமேட் விஷயமென்றும் அதை அனுசரித்தே பட்ஜெட்டில் திருத்தம் செய்யப்பட்டதென்றும் ஆகையால் கவர்ன்மெண்டார் இந்த உத்திரவு சம்பந்தமாக மீண்டும் புனராலோசனை செய்யவேண்டுமென்றும் பெரும்பாலான மெம்பர்கள் அபிப்பிராயப்பட்டனர். டாக்டர் சுப்பிரமணியம் அவர்கள், ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ்செட்டியாரவர்கள் ஆவி. பழ. சித. இராமநாதன் செட்டியாரவர்கள், ரெ. கோ. ரங்காமானுஜய்யங்காரவர்கள், மெ. செ. ராமசாமி செட்டியாரவர்கள், எஸ். கந்தசாமி பிள்ளையவர்கள், ஆகியவர் கவுன்ஸிலின் மேற்கண்ட முடிவுக்கு எதிராக அபிப்பிராயங் கொள்வதாக அறிவித்தனர். கவுன்ஸிலர் பெரும்பாலோரின் அபிப்பிராயப்படி தீர்மானிக்கப்பட்டது.

### சாதாரணக் கூட்டம்

பின்பு காலை 10 மணிக்கு சாதாரண மீட்டிங் ஆரம்பமாயிற்று.

### புது கவர்னருக்குப் பாராட்டு

சென்னை கவர்னர் லார்டு எர்ஸ்கின் அவர்கள் ரஜாவில் செல்வதால் அவருக்குப் பதிலாக ஸர். கே. வி. ரெட்டி நாயுடுகாரு சென்னை கவர்னராக நியமிக்கப்பட்டிருப்பதற்கு இக்கவுன்ஸில் சந்தோஷப் படுவதாகவும் இதை அவருக்குத் தெரிவிப்பதாகவும் திருவாளர் மு. ராம. பெரியணன் செட்டியாரவர்களால் கொண்டுவரப்பட்ட தீர்மானம் திரு சி. மு. அரு. நாராயணன் செட்டியாரவர்களால் ஆமோதிக்கப் பெற்று திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களால் ஆதரிக்கப் பெற்று ஏகமனதாக நிறைவேறியது.

பின்பு திரு எஸ். கந்தசாமி பிள்ளையவர்களால் கொண்டுவரப்பட்ட தீர்மானங்கள் வருமாறு:—

### சேரியில் மின்சார விளக்கு

கீழுஊரணிக்குத் தென்புறமுள்ள ஹரிஜன சேரியில் மின்சார விளக்குகள் மூன்று போட வேண்டுமென்று இக் தக் கவுன்ஸில் தீர்மானிக்கிறது.

லைட்டிங் கமிட்டியெனத் தனியாக ஒன்று ஏற்பட்டிருப்பதால் அதற்கு இதைச் சிபார்சு செய்தால் போதுமென்றும் தனியாக இப்படி ஒரு தீர்மானம் வேண்டியதில்லை யென்றும் திருவாளர் சி. மு. அரு. நாராயணன் செட்டியாரவர்கள் கூறினார்கள். அக்கமிட்டி பூர்த்தியடைந்துவிட்டபடியாலும், அது தனது அறிக்கையைச் சமர்ப்பித்துவிட்டபடியாலும் அதில் இனி சேர்க்க முடியாதென்றும் கூறப்பட்டது. பின்னர் சேரியில் எந்த இடத்தில் மின்சார விளக்குகள்போடுவதென்பது குறித்து விவாதம் நடந்தது. கடைசியாக திரு. சி. மு. அரு. நா. அவர்கள் இடங்களைப் பார்வையிட்டுத் தகுந்த இடத்தை அறிவிப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

இந்த முனிசிபாலிட்டியிலிருந்துசெய்யப்படும் தமிழ் விளம்பரங்களெல்லாம் சென்னை தினமணிப் பத்திரிகையிலும் செய்யப்படவேண்டுமென்று கொண்டுவந்த தீர்மானம் விவாதத்துக்கு வந்தது. ஷை தினமணிப் பத்திரிகை சர்க்கார் விளம்பரம் முதலியன செய்யக் கூடாதென கவர்மெண்டாரால் தடுக்கப்பட்டிருப்பதாக கமிஷனர் தெரிவித்தார். அந்த உத்திரவைப்படிக்கும்படி சில அங்கத்தினர் கேட்டுக் கொண்டனர். அது இரகசியமானதாகையால் வெளியிடக் கூடியதல்ல வென்று கமிஷனர் தெரிவித்தார்.

உள்ளூரில் இரண்டு பத்திரிகைகள் இருக்கும்பொழுது அவைகளை விடுத்து சென்னைப் பத்திரிகையில் விளம்பரம் செய்யவேண்டிய அவசியமென்னவென்று சில கௌன்ஸிலர் கேட்டனர். கடைசியாக சென்னைத் தினசரிப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டால் மற்றப் பத்திரிகைகளோடு தினமணியிலும் விளம்பரம் செய்வதென்று முடிவு செய்யப்பெற்றது.

### ஹெல்த் ஆபீஸர் நியமனம்

இந்த முனிசிபல் எல்லைக்குள் பொது ஜன சுகாதாரம் மிகவும் சீர்கேடான நிலைமையிலிருப்பதால் அதைச் சரிவர நிர்வகிக்கும்பொருட்டு பிரத்தியேகமாய் இந்த முனிஸிபாலிடிக்கு ஒரு ஹெல்த் ஆபீஸர் நியமிக்கவேண்டியது அவசியம் என்ற தீர்மானம் பிரேரேபிக்கப்பெற்றது.

இதன் வழியாக ஏராளமான செலவு வரக்கூடுமென்றும் முனிஸிபாலிடி இச்செலவைத் தாங்கக்கூடியதாக இல்லையென்றும் திரு. ச. பீ. ந. மு. அபிப்பிராயப்பட்டார். கவர்ன்மெண்டார் மூன்றிலொரு பங்குச் செலவை ஏற்றுக்கொள்வார்களாகவே இதனால் பெருத்த நஷ்டமேற்பட இடமில்லையென்றார் டாக்டர் சுப்பிரமணியம். இப்பொழுதுள்ள சானிட்டரி இன்ஸ்பெக்டர்கள் சரியானபடி நகர சுகாதாரத்தைப் பாதுகாக்க இயலாமல் இருப்பதால் ஒரு ஹெல்த் ஆபீஸர் அவசியமே என்று சில கௌன்ஸிலர் அபிப்பிராயப்பட்டனர். கடைசியாக இதே அளவு வருமானமுள்ள வேறு சில முனிஸிபாலிட்டிகளுக்கு எழுதி ஹெல்த்ஆபீஸர் சம்பந்தமாக அங்கு என்ன செலவாகிறதென்பதை அறிந்துகொண்டு பின்பு முடிவு செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

### கால் நடை ஆஸ்பத்திரி

கால்நடைப் பிராணிகளுடைய வியாதிகளுக்குத் தகுந்தபடி சிகிச்சைசெய்ய நகரில் வசதி இல்லாமலிருப்பதால் அத்தகைய ஆஸ்பத்திரியொன்றை ஏற்படுத்தவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது.

12-வது வார்டில் வெ. ராம. சந்தில் சாக்கடை ஜலம் வீதியில் தேங்கி சுகாதாரக் குறைவாயிருப்பதால் இரண்டு ட்ரெய்ன்ஸ் கட்டி தென்பக்கம் சந்தில் உள்ள ட்ரெயினில் சேர்க்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது.

திரு. ஆர். ஜி. ரங்கராமானுஜ மய்யங்காரவர்கள் கொண்டுவந்ததீர்மானங்கள் வருமாறு:—

### ஐஸ்கேணிப் பாதை

குறிச்சிக்கண்மாயில் உள்ள ஐஸ்கிணற்றின் தண்ணீர் ஜனங்களுக்கு மிகவும் உபயோகமாக இருப்பதாலும் அங்கு தினந்தோறும் ஏராளமான ஜனங்கள் போய் வந்துகொண்டிருப்பதாலும் இந்தக் கிணற்றுக்குப் போகும்வழி மிகவும் சீர்கெட்டிருப்பதால் அழகப்பனம்பலம் வீட்டுக்குத் தென்புறமிருந்து ஷை கிணற்றுக்கு போகும் வழியை சீர்திருத்த செய்யவேண்டுமென்று இந்தக் கவுன்ஸில் தீர்மானிக்கிறது.

இந்த விஷயம் விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இந்த இடம் வேறொருவரைச் சேர்ந்ததாக இருப்பதால் அவர்களது அனுமதியின்றிப் பாதையைச் செப்பனிடுவது சரியில்லையாகையால் இடத்துக்காரரைக் கண்டு பேசி முடிவு செய்வதெனத் தீர்மானிக்கப்பெற்றது.

கல்லுக்கட்டி வடக்குவீதியில் ஜட்கா வண்டிகள் நிற்குமிடத்திற்குக் கீழ்புறமுள்ள காலியிடத்தில் நல்ல முறையிலுள்ள ஒரு பொதுக் கக்கூஸ் கட்டவேண்டுமென்ற தீர்மானம் ஆலோசனைக்கு வந்தது. பலத்த விவாதத்துக்குப் பின் வாட்டர்ஸ்கீம் ஏற்பட்டபின் இதைப்பற்றி யோசிக்கலாமென்று முடிவு செய்யப்பெற்றது.

டவுனில் உள்ள முனிஸிபல் மின்சார விளக்குகளுக்கு சுதேசி பல்புகளை உபயோகப்படுத்தவேண்டுமென்றும் இப்பொழுதுள்ள மெயிண்டனென்ஸ் ரேட்டையும் காரண்டு சப்ளை ரேட்டையும் 20 பர்செண்டு குறைக்கவேண்டுமென்றும் கார்ப்பரேஷனைக் கேட்டுக் கொள்கிறது என்ற தீர்மானத்தைக் கார்ப்பரேஷன் காண்ட்ராக்ட் ஷரத்துக்களைப் பார்த்து முடிவுசெய்வதென்று தீர்மானிக்கப்பெற்றது.

டவுனில் பொதுஜன போக்குவரத்துக்கு இடஞ்சலாக மின்சாரக் கம்பங்கள் பல வீதிகளில் நாட்டப்பட்டிருப்பதால் அவைகளைக் கமிஷனர் கவனித்து ரோடு ஓரங்களில் ஊன்றுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது.

திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் கொண்டுவந்த தீர்மானம் வருமாறு:—

3-வது வார்டு கண்டனூர் ரோடு தெற்குக் கடைசி மூலையில் உள்ள கால்வாயை வெள்ளைக்கல் வரி எடுத்து தகடு போட்டு மூடி ரோட்டை அகலப்படுத்துவதென்ற தீர்மானம் எஸ்டிமேட் போட்டுப் பார்த்து முடிவு செய்வதென்று தீர்மானிக்கப்பெற்றது.

திரு. அ. ராம. ராம. இராமநாதஞ் செட்டியாரவர்கள் கொண்டுவந்த தீர்மானம்:—

சி. மெ. வீதியில் ஷையாரின் வீட்டிலிருந்து தெற்கே புதுச்சந்தை ரோடு வழியாகவும் அதிலிருந்து மேற்கே தேவகோட்டை ரோடுவரையிலும் ரயில்வே மற்ற இடங்களுக்கும் அதிகப் போக்குவரத்தாக இருக்கிறபடியாலும் ஷை ரோட்டை முழுதும் வெள்ளைக்கல் மெட்டலால் சீர்திருத்தவேண்டும்.

கமிஷனர் போட்டிருக்கும் ரோடு மெயின்டினன்ஸ் எஸ்டிமேட்டில் மேற்குறித்த இடமும் சேர்ந்திருக்கிற படியால் இத்தீர்மானம் வற்புறுத்தப்படவில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் பிரபல காங்கிரஸ் தலைவர் டாக்டர் அன்ஸாரி அவர்கள் காலஞ் சென்றதாகச் செய்தி கிடைத்தது. திரு. கந்தசாமிப் பிள்ளையவர்களால் "42-வது காங்கிரஸ் தலைவரும், பிரபல தேசபக்தருமான டாக்டர் அன்சாரி அகாலமரணமடைந்தது குறித்து இக் கௌன்ஸில் வருந்துவதாகவும், கௌன்ஸிலின் அனுதாபத்தை பண்டித ஜவஹருக்கும் அன்சாரியின் குடும்பத்தாருக்கும் தெரிவிப்பதென்றும், சபையை மாலை 4 மணி வரை மேற்படி சம்பவத்துக்காக ஒத்திவைப்பதென்றும்" கொண்டுவரப்பட்ட தீர்மானம் திரு. ச. பீ. ந. மு. முகம்மது இப்ராகிம் ராவுத்தரவர்களால் ஆமோதிக்கப்பட்டு ஏகமனதாக நிறைவேறியது. சபை பிற்பகல் 4 மணிக்கு ஒத்திவைக்கப்பெற்றது.

பிற்பகல் குறிப்பிட்டபடி, சபைக்குக் கோரமில்லாததால் மீட்டிங் நடக்கவில்லை.

## திருப்புத்தூர் மெய்வழிச் சபை

(ஒரு நிருபர்) மே 8௳

சென்ற மூன்று தினங்களாக இராமநாதபுரம் ஜில்லா திருப்புத்தூரிலுள்ள மெய்வழிச் சபை என்னும் ஞானசபையானது சபாநாயகர் அவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ ஞானபண்டித ஆஷிகில் ரசூல் வேதராஜ் ரிஷி மார்க்கநாத ஆண்டவர்கள் அவர்களின் திருச்சன்னிதானத்தில் நடைபெற்றது. அச்சமயம் சுமார் 100 சிஷ்யர்கள் பல விடங்களிலிருந்தும் வந்து கூடியிருந்து சபாநாயகர் அவர்களால் போதித்து அருளப்பெற்ற ஹிதோபதேசங்களையும் ஞானதீக்ஷைகளையும் செவிமடுத்தனர். இந்த மூன்று நாட்களிலும் இரவும் பகலும் இடைவிடாத பேரானந்தத்தில் மூழ்கி இருந்தார்கள். இந்தஞானசபையில்சென்னைமிட்லண்ட் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் டைரெக்டரும் மெட்ராஸ் கமர்ஷியல்ஸ் லிமிடெட்டின் மானேஜிங் டைரெக்டருமான தேவகோட்டை அ. வெ. தியாகராஜா ஒரு ஜீவிய அங்கத்தினராகச் சேர்ந்தகொண்டார்.

# மதன—சுந்தரன்

அல்லது

## மங்கையின் மையல்

வை. சீதாராமன்

மாலை மணி ஐந்து. மேற்றிசைக் கதிரவனின் செங்கிரணங்கள் சல சல வென்றும் செவிக்கினிய சப்தத்துடன் கற்பாறைகளினிடையே ஓடிக் கொண்டிருக்கும் நம்பியாற்றின் தெள்ளிய நீரை உருக்கிவார்த்த தங்கத்தைப் போல் ஜ்வலிக்கச் செய்து கொண்டிருந்தன. ஆற்றை யடுத்துள்ள அழகிய பூங்காவன மொன்றில் ரதியை பழிக்கும் பேரெழில் படைத்த பெண்ணரசி யொருவள் அன்னத்தைப் போல் ஆடி ஆடி உலாவிக் கொண்டிருந்தாள். பிராட்டியாரை வர்ணித்த கம்பன் சீதைக்கு சீதையையே உவமை கூறியதற் கொப்ப ரூபலாவண்யத்தில் இவளுக்கு நிகராக இவளைத் தவிர வெறு எவரையும் கூற முடியாது.

மதியை யொத்தவ்தனம்; வில்லை யொத்த புருவங்கள்; வேலையொத்த விழிகள்; பவழத்தைப் பழிக்கும் இதழ்கள். காதலனின் கனிவான முத்தங்களைக் கனவிலும் கண்டறியாத, கன்னங்கள் பத்தரை மாற்று பொன்னெனன் மின்னும் பொலிவு—சுருங்க கூறுங்கால் அவளை அழகின் அவதார மென்றே சொல்லிவிடலாம்; அவள் உச்சி முதல் உள்ளங்கால் வரையில் சுதேசி சாமான்களையே பூண்டிருந்தது இங்கு குறிப்பிடத்தகுந்ததாதும்.

அவளது பூங்காவை நோக்கி சுமார் 25 வயது மதிப்பிடத்தகுந்த ஓர் இளைஞன் குதிரைச்சவாரி செய்து கொண்டு வந்தான். அவனது மனம் எங்கெங்கோ ஊசலாடிக் கொண்டிருந்த தென்பது ஆழ்ந்த சிந்தனையில்டுபட்டிருந்த அவனது முகம் தெற்றென விளக்கிக் காட்டியது. இவ்விளைஞன் தோட்டத்தினுள் புகுகையில் முற்றிலும் எதிர்பாராத தோர் பயங்கரச் சம்பவம் நிகழ்ந்தது. அதாவது கூர்மையான கொம்புகளை யுடையதோர் கொழுத்தகாளை கோபாவேசத்துடன் அவளை நோக்கிச் சீறிக் கொண்டு வந்தது. அடுத்த சில நிமிஷங்களுக் கெல்லாம் இளைஞனின் குதிரையைப் பின்னலிருந்து தாக்கியது. இளைஞன் கலவரத்துடன் தனது கைச்சவுக்கினுல் காளையை தாக்கினன். ஆனல்அவனுடைய அடிகளைக் காளை லட்சியம் செய்வதாகத் தோன்றவில்லை. இறுதியில் அவன் கை சவுக்கும் நழுவிக் கிழே விழுந்து விட்டது.

நிராதரவான நிலைமையிலிருந்த இளைஞன் யாது செய்வதெனத் தயங்கி நிற்கையில் அந்த எருது இடியோசையைப்போல் "மா" என்று கத்தியது. அச்சத்தினுலும் குழப்பத்தினுலும் வாலிபன் தனது கண்களை இறுக மூடிக் கொண்டான். அன்றுடன் தனது வாழ்நாள் முடிந்து விட்டதாகவும் அவன் கருதிவிட்டான். அந்தோ பரிதாபம் அவன் என்ன செய்வான். குதிரையின் மீதிருந்தாலும் ஆபத்து; கீழிறங்கினுலும் ஆபத்து; இருதலைக் கொள்ளி எறும்பு போல் துடித்தான் வாலிபன்.

கோபாவேசத்துடன் குதிரையைக் கொம்புகளால் தாக்கிய காளை மற்றுமொரு முறை பூமி கிடு கிடு வென்று ஆடும்படி கத்தியது. அடுத்த நிமிடம் "அன்பரே! கண்ணைவிழியுங்கள்" என்ருேர் இனிமையான குரல் இளைஞனின் செவிகளில் வீழ்ந்தது. சென்ற உயிர் மீண்டது போலிருந்தது. வாலிபன் கண்ணை விழித்துப் பார்த்தான். எருது இருந்த இடத்தில் காணும். தவிர அவன் முன் புன் முறுவலுடன் நின்ருள் ஓர் பூங்கோதை அவள் தான் இக்கதையின் ஆரம்பத்தில் பிரஸ்தாபித்த பேரெழில் மடந்தை.

இளைஞன்:—சகோதரி மிக மிக நெருக்கடியான இச்சந்தர்ப்பத்தில் எனதுஉயிரைக் காப்பாற்றிய தங்களுக்கு நான் ரொம்பவும் கடமைபட்டிருக்கின்றேன். நீங்கள் இன்னும் சில விநாடிகள் தாமதித்து வந்திருந்தால் நான் விண்ணுலகு ஏகியிருப்பேன்" என்று நன்றியறிதல் நிறைந்த பார்வையுடன் கூறினன்.

யுவதி:—அன்பரே! எங்களது மாளிகைக் காளை தங்களை ரொம்பவும் பயப்படுத்திவிட்டது, அதற்காக நான் மனப்பூர்வமாக வருந்துகின்றேன் என்ருள்.

இளைஞன்:—அது இப்பொழுது எங்கே?

யுவதி:—போய்விட்டது. அது மிகவும் சாதுவானது. எனினும் வேற்று மனிதர்களைக் கண்டால் மிரளுவது மிருகங்களுக்கியல்புதானே! அது கிடக்கட்டும். தாங்கள் எவ்வூரோ.

இளைஞன்,—சகோதரி நான் கல்லிடைகுறிச்சிவாஸி. எனதுபிதா கிருஷ்ணஸ்வாமி என்பவர்.

கிருஷ்ணசுவாமி என்னும் பெயரைக் கேட்டமாத்திரத்தில் யுவதியின் இதழ்கள் புன்னகையால் பிரிந்தன. அவள் இளைஞனைக் கடைக்கண்களால் நோக்கினள். அதே சமயம் அவனும் அவளை நோக்கவே இருவர் கண்களும் சில விநாடிகள் வரை கலந்திருந்தன. உள்ளம் கலந்தன. உயிர்கலந்தன. இருவரும் மண்ணுலகை மறந்து சில நிமிடங்கள் வரை மெய்மறந்திருந்தனர்.

மணிக்கூண்டு கடியாரத்தில் மணி ஏழடித்தது. இளைஞனுக்கு மண்ணுலகின் ஞாபகம் திரும்பிற்று. எதிரில் நோக்கினன். அவள் முன் நின்ற பேரெழிலாள் மாயமாய் மறைந்துவிட்டாள். இளைஞன் தனக்குள் பின்வருமாறு எண்ணலானன்.

"இவள் யார்? பூவுலகப் பெண்ணு? அல்லது விண்ணுலகு மோகினியா? இவ்வளவு எழில்படைத்த மங்கையரும் மண்ணுலகில் இருக்கின்றனரா? இவள் ஏன் திடீரென மறைந்துவிட்டாள்? எனது பிதாவின் பெயரைக் கேட்டதும் அவளது வதனம் மலர்ச்சியடையக் காரணம் என்ன? ஒருக்கால் இவளே நான் நாடிவந்திருக்கும் சந்திரசேகரரின் அருந்தவச் செல்வி மதனவல்லியாயிருப்பாளோ? ஆம்! அப்படித்தான் இருக்க வேண்டும்! எனது தந்தை கூறிய இலக்ஷணங்களெல்லாம் இவளிடம் ஒருங்கே அமையப்பெற்றிருக்கின்ருள்."

இவ்வாறு தனக்குள் எண்ணமிட்டவனுய் பளிங்குபோல் பிரகாசிக்கும் வெண்ணிலவில் தனது பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்தினுன். அவ்வமயம் "மணந்தால் இவளையே மணப்பது இன்றேல் மணமின்றியே மரிப்பது" என்ற தீர்மானம் அவன் உள்ளத்தில் உறுதியாக ஏற்பட்டுவிட்டது. அவன் பக்கத்து கிராமத்திலுள்ள போஜனசாலையை அடைகையில் மணி ஒன்பதுக்கு மேலாகிவிட்டது. அன்றிரவு அவனுக்கு உறக்கம் கொள்ளவில்லை. மனோ நிம்மதியற்றவர்களுக்கு உறக்கமேது?

இளைஞனை விட்டுவந்த பெண்மணி தனது பங்களாவை அடைகையில் "மதனு? ஏன் இவ்வளவு நேரம்? எங்கு சென்றிருந்தாய்? என்று வினவினர் அவளது தந்தை. கன்னி மதனு தனது மனோ நிலையை வெளிக்காட்டிக்கொள்ளாதவாறு 'பிதாஜி! நிலா வெளிச்சத்தில் சற்று நேரம் அதிகமாக உலாவிவிட்டேன். இன்று பூரண சந்திரன் எவ்வளவு மனோகரமாயிருக்கின்ருன் பாருங்கள்' என்று சாதுர்யமாய் பதிலளித்தாள்.

அன்றிரவு பத்மாவிற்கும் உறக்கமில்லை. உடல் பிணிக்கும் மனப் பிணிக்கும் உறக்கம் சத்துருவன்ருே? காதல் நோயின் வசப்பட்ட கன்னிக்கு கண்ணயர்வு எங்ஙனம் ஏற்படும். செல்வி மதனு மஞ்சத்திலமர்ந்து தனது நிலைமையைக்குறித்து சிந்திக்கலானுள். அவளது உடல் படுக்கையில் இருந்ததேயாயினும் உள்ளத்தை இளைஞன் கவர்ந்துகொண்டுபோய்விட்டான். அவளுடைய மனக் கண்கள் முன் வாலிபனின் கம்பீரத் தோற்றம் தாண்டவமாடிக்கொண்டிருந்தது.

மறுநாள் மாலை சுமார் 5 மணிக்கு நமது இளைஞன் மதனுவின் மாளிகையின்பக்கமாக வந்தான். அவ்வமயம் மாளிகையில் சென்று சில நிமிடங்களேனும் அவளுடன் இனிமையாக வார்த்தையாடவேண்டு மென்ற ஆவல் கொண்டான். ஆனல் "வலியச்சென்ருல் நம்மைக் காமுகன் என்று கருதிவிடுவாளோ" என்ற அச்சமும் அடுத்தாற்போல் அவனது உள்ளத்தில் உதயமாயிற்று. "நாம் ஆற்றினருகே புற்றரையில் சிறிது அமர்ந்திருப்போம், ஒருக்கால் அவளும் அங்கு வந்தாலும் வரலாம்" என்று தீர்மானித்தவனுய் நந்தவனத்தை யடுத்துள்ள ஆற்றின் பக்கம் சென்ருன். இனம் இனத்தோடே என்றதற்கொப்ப இவளைச் சந்திக்கக்கூடு மென்ற நோக்கத்துடன் மதனுவும் ஆற்றின் நீரருகே புற்றரையில் அமர்ந்திருந்தாள்.

இளைஞன் தரிசித்தான். மனத்துள் உவகை பூத்தான். பத்மாவை அணுகி "சகோதரி மாலைப்பொழுதைக் கழிக்க வந்த எனக்கு மறுபடியும் தங்களது தரிசனம் கிடைத்தது பாக்கியமென்றே கருதுகின்றேன். உண்மையில் தங்களை நான் எதிர்பார்க்கவில்லை." யென்று புன்முறுவலுடன் புகன்ருன்.

"தங்களைச் சந்திக்க நேர்ந்ததும் எனது பாக்கியம்தான்" என்று பதிலளித்தவாறு காதல் ததும்பும் கனிந்த பார்வையில் அவளை நோக்கிய வண்ணம் புற்றரையில் அமரும்படி சமிக்ஞை செய்தாள். சிங்காரி மதனு.

வாலிபன் அவளருகிலமர்ந்து "சோதரி எனது உயிரைக்காப்பாற்றிய தங்களின் நாமதேயத்தைநான் அறிந்துகொள்ளக்கூடாதா" என்று வினவினன்.

"என்னை மதனவல்லி என்பார்கள். எனது பிதாவின் பெயர் சந்திரசேகரர். அவரும் தங்கள் பிதாவும் பள்ளி சகாக்கள். தங்கள் பெயர் சுந்தரராமன் என்பதும் எனக்குத் தெரியும்" என்று நாணத்துடன் கூறினள் நங்கை. ஆம் என் பெயர் சுந்தரராமன் தான். நீங்கள்தான் மதனு என்றறிய அளவிலா மகிழ்ச்சி யடைகின்றேன். தங்களைப்பற்றி எனது சகோதரி பன்முறை கூறியிருக்கின்ருள். தங்களுக்கு இன்னும் மணமாகவில்லையல்லவா?

மதனு:—இல்லை.!

இப்பதிலளிக்கையில் அவளது கன்னங்கள் சரேலென சிவந்தவன. அதை சுந்தரன் கவனியாமலில்லை.

சுந்தரன்:—மணமாகாத நீங்கள் தனித்து உலாவுவதை எங்ஙனம் உங்கள் பிதா அனுமதித்திருக்கின்ருர்.

மதனு:—என் தந்தை தற்கால நாகரீகத்தை தழுவியவர். பெண்களின் சமத்துவத்தை ஆதரிக்கின்றவர். அவருக்கு என்னிடம் மட்டற்ற அன்புண்டு. எனது சுகதுக்கங்களிலேயே கண்ணுங் கருத்துமாயுள்ளவர். இப்பொழுதும் அவர் என்னையே எதிர் நோக்கியிருப்பார். மணியும் ஏழு ஆகப்போகின்றதல்லவா?

சுந்தரம்:— அதுதான் கற்றதினலாய பயன். பெண்களை அவர்களின் மனத்துக்கு விருப்பமில்லாத ஆடவர்களுக்கு விவாகம் செய்து கொடுத்ததனல் அதிகப்படும் குடும்பம் நம் நாட்டில் எண்ணத்தரமன்று. மதனு! அம்மட்டில் நீ பாக்கியசாலிதான். உன் அன்புக்குப் பாத்தியமானவன் யானே! இதற்குள் யாரையாவது தெரிந்தெடுத்திருப்பாயல்லவா? என்று கீழ்நோக்கியவாறே குத்தலாக மொழிந்தான்.

மதனு சட்டென முகத்தைக் கவிழ்ந்து கொண்டாள். "அன்பரே என் பிதா காத்துக்கொண்டிருப்பார், நீங்களும் எங்கள் இல்லத்தில் இன்றைய இரவைக் கழித்துவிட்டு நாளை செல்லலாகாதா. என் பிதா தங்களை இன்னரென்றறிய ரொம்பவும் சந்தோஷமடைவார் என்று குயிலினுமினிய குரலில் கூறினள்.

சுந்தரம்:—உன் அழைப்பிற்கு ரொம்பவும் வந்தனம். நானும் உன் பிதாவைக் காண அவாவுற்றேன். நான் உன்னுடன் வருவதில் உனக்கு அதிருப்தி யில்லையாயின் உன் அழைப்பை நான் மனப்பூர்வமாய் ஏற்றுக் கொள்ளுகிறேன். நிலவு எவ்வளவு நன்ருய்ப் பிரகாசிக்கின்றது. தண்ணீருக்குள் சந்திரன் பிரதிபலிப்பதைக் காண எத்தனை ரமணிகரமாயிருக்கின்றது. இங்கு அமர்ந்திருந்தால் உலக சிந்தனையே ஏற்படாதென்பது திண்ணம்.

இருவரும் பங்களாவை அடைந்தனர். சந்திரசேகரர் அவ்விருவர்களும் சற்று தூரத்தில் வரும்பொழுதே கூர்ந்து நோக்கிய வண்ணமிருந்தார். இருவரும் சமீபமடைந்தவுடன் மதனு, சந்திரசேகரரிடம் சுந்தரனை அறிமுகம் செய்தாள். கிருஷ்ணசுவாமியின்

(18-ம் பக்கம் பார்க்க)







## சென்னை செட்டியார்கள் சங்கம்

### புதுவருட நிர்வாகஸ்தர் தேர்தல்

(நமது நிருபர்)

சென்னை நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கத்தின் வருஷாந்திர மீட்டிங் ஜானுடுகோத்தான் எலக்டிரிக் கார்ப்பரேஷனில் மே 10உ மாலை 4 மணிக்கு நடைபெற்றது.

செட்டிநாடு கனம் ராஜா சர் அண்ணமலை செட்டியாரவர்கள் தலைமைவகித்தார்கள். 52 மெம்பர்கள் ஆஜராயிருந்தனர்.

நடவடிக்கைகள் ஆரம்பமாவதற்கு முன் தலைவர் அவர்களால் மன்னர்பிரானுகிய ஐந்தாம் ஜார்ஜ் அவர்கள் காலமானது குறித்து இந்தச் சங்கம் தனது முழு அனுதாபத்தை மாட்சிமை தங்கிய எட்டாவது எட்வர்டுக்கும் மேரி ராணிக்கும் ராஜகுடும்பத்தினருக்கும் செலுத்துவதாக உள்ள தீர்மானம் பிரேரேபிக்கப்பெற்று அதை ஏகமனதாக யாவரும் எழுந்து நின்று நிறைவேற்றினர்.

இந்தத் தீர்மானததை கனம் வைசிராய் மூலமாக எட்டாவது எட்வர்டு மன்னருக்கும், ராஜகுடும்பத்தினருக்கும் மேரிராணியாருக்கும் அனுப்ப வேண்டுமென்றும் தலைவரைக் கேட்டுக்கொள்ளப் பெற்றது.

1935-ம் வருஷத்திய அறிக்கையும் கணக்குகளும் படித்து ஒரு மனதாக ஒப்புக்கொள்ளப் பெற்றது.

பின்னர் 1936-ம் வருஷத்திற்குக் கீழ்க்கண்ட பிரமுகர்கள் நிர்வாகஸ்தர்களாக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

தலைவர்:—கனம் செட்டிநாடு ராஜா அவர்கள்.

உபதலைவர்:— தேவகோட்டை ஜமீன்தாரவர்கள்.

கௌரவ காரியதரிசி:—ராவ் பகதூர் என். ஏ. இராமநாதஞ் செட்டியாரவர்கள்.

பொக்கிஷதார்:— திருவாளர் சி. வி. சி. டி. வெங்கிடாசலஞ் செட்டியாரவர்கள்.

நிர்வாகக் கமிட்டி மெம்பர்கள்

திருவாளர்கள் ராவ்பகதூர் உ. அ. பெரி. மு. அருணசலம் செட்டியார், ராவ்பகதூர் க. வீ. அள. ராம. ராமநாதஞ் செட்டியார், மு. ராம. பெரியணன் செட்டியார், என். கே. ஏ. ஆர். எம். கிருஷ்ணன் செட்டியார், ராவ்பகதூர் பி. கே. ஏ. சி. டி. வீரப்ப செட்டியார், ஏ, நா. காசிவிஸ்வநாதன் செட்டியார், ஓ. ஆர். எம். எம். எஸ். எம். காசிவிஸ்வநாதன் செட்டியார், எஸ். எம். சுப்பையா செட்டியரார், எஸ். எம். ஏ. ஆர், நாராயணன் செட்டியார் ஆகியோராவர்.

வந்தன வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிவெய்தியது.

சென்னைச் சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழா ஆகஸ்டு 29ந் தேதி நடைபெறும்.



## தேர்தலில் சொன்னது என்ன?

### திருநெல்வேலி ஜில்லா போர்டுத் தலைவர் மீது புகார்

### காரியதரிசியின் கடிதம்

திருநெல்வேலி ஜில்லாபோர்டு காங்கிரஸ் கட்சியின் காரியதரிசி ஸ்ரீ எஸ். என். அம்பலவாணப்பிள்ளை மேற்படி காங்கிரஸ் கட்சியின் காரியதரிசிப் பதவியையும் கட்சி அங்கத்தினர் பதவியையும் ராஜிநாமாச் செய்துவிட்டார். அவரது ராஜிநாமாக் கடிதத்தில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:—

ஜில்லாபோர்டு மெம்பர்கள் தேர்தல் பிரசார காலத்தில் ஜில்லாபோர்டு நிர்வாகத்தைப்பற்றி வாக்காளர்களிடம்கூறிய விஷயங்களில் முக்கியமானது கண்ட்ராக்ட் விடுகிற முறையேயாகும். அதாவது குறைந்த டெண்டரை அங்கீகாரஞ் செய்யவேண்டியதற்கு மாருக பிரசிடெண்டு ரிவைஸ்டு டெண்டர் எழுதி வாங்கிக்கொண்டு கண்ட்ராக்ட்டு கொடுத்த வழக்கமானது நிர்வாகத்தில் மிகவும் அநீதியானது என்பதை நாம் பல முறை கண்டித்துப் பேசிவந்தோம். ஆனுல் 1936-37-ம் வருஷ ரோடு சப்ளை விஸ்தரிப்பு டெண்டர்களில் ஸ்டாண்டிங் கண்ட்ராக்டர்களின் குறைந்த டெண்டர்களை அங்கீகாரம் செய்யாமல் அநேக புதிய நபர்களிடம் டெண்டர்களை வாங்கிக்கொண்டு கண்ட்ராக்டுகள் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஜில்லா போர்டு மீட்டிங் ஹாலில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் கத்தர் குல்லாய் அணிந்து கொள்ளவேண்டு மென்பது கட்சியின் நிபந்தனை. அதைச் சரியாக அனுஷ்டிக்காமலிருந்த நிலையில் கட்சிக் கொறடா 9 பேருக்கு நோட்டீஸ் கொடுத்தும் கூட ஜில்லா போர்டு தலைவரும் இதாரும் காந்திக் குல்லாய் தரித்துக் கொள்கிறதில்லை.

ஜில்லா போர்டு 56 உபாத்தியாயர்களை தேவையில்லை யென்று 3 மாத நோட்டீஸ் கொடுத்த விஷயமாக 17-4-36-ல் ஸ்ரீ சாவடிகூத்த நயினர் பிள்ளை வீட்டில் கூடிய கட்சிக்கூட்டத்தில் ஜில்லா போர்டு ஸ்பெஷல் மீட்டிங் ஒன்று கூட்டி ஷை 56 உபாத்தியாயர்களுக்கும் வேலை கொடுக்க வேண்டு மென்று தீர்மானிக்கப்பட்டது. ஷை தீர்மானத்துக்கு மாருக சங்கரநயினர் கோவில் ஹைஸ்கூல் உபாத்தியாயர் கிருஷ்ணசாமி ஐயர் எம். ஏ. எல். டி. யைத் திடீரென்று வேலையிலிருந்து நீக்கி ஸ்ரீ வேலப்ப நாயுடுவை நியமித்திருப்பதாகத் தந்திமூலம் உத்தரவு அனுப்பப்பட்டிருக்கிறது.

குறைந்த சம்பளமுள்ள ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர்களை அடிக்கடி மாற்றுவதுடன் நீண்டகாலம் ஆக்டிங் வேலை பார்த்துவந்த ஆசிரியர்களுக்குப் பதில் புதிய நியமனங்கள் செய்யப்படுகின்றன.

மகத்தான காங்கிரசின்பெயரால் வாக்காளர்களின் ஓட்டுகளை வாங்கி வந்து மேற்படி காங்கிரசின் கொள்கையை அனுசரித்து நடந்துகொள்ள ஜில்லா போர்டில் தற்போதுள்ள காங்கிரஸ் கட்சியில் மார்க்கமில்லாத நிலையில் நான் மேற்படி கட்சியில் அங்கத்தினராக இருப்பதைப் பார்க்கிலும் ராஜீநாமாச் செய்து விடுவதே சிறந்ததென்று கருதுகிறேன்.

## பிரிட்டனில் இந்திய அரசியல் மகாநாடு

தொழிலாளர் இயக்கத்தார் ஒத்துழைப்புடன் ஐந்தாவது இந்திய அரசியல் மகாநாட்டை ஜுலை மாதம் பிரிட்டனில் கூட்டுவதென்று இந்திய சுயராஜ்ய சங்கத்தார் தீர்மானித்திருக்கிருர்கள். திரு. புலாபாய்தேசாய் மகாநாட்டுக்குச் செல்வாரென்று நம்பப்படுகிறது.

## வங்காளத்தில் பஞ்சம்

வங்காளத்தில் மறுபடி கடுமையான பஞ்சமேற்பட்டிருக்கிறது. பயிர் சரியாக விளையாததாலும் சில பாகங்களில் வெள்ள மேற்பட்டதாலும் சில ஜில்லாக்களில் வறுமைப் பிணி நிலவ ஆரம்பித்துவிட்டது. கவர்மெண்டுக் கணக்குப்படி 31-லட்சம் ஜனங்களுக்கு மேலாகவே இந்தப் பஞ்சத்தால் பாதிக்கப்பட்டுவிட்டனரென்று தெரிய வருகிறது.

## பங்களூரில் மகாத்மா.

### திவானுடன் சம்பாஷணை.

10உ காலை மதராஸ் மெயிலில் மகாத்மா காந்தி தமது மனைவியுடன் மைசூர் சேர்ந்தார். ரயில் 20 நிமிஷம் தாமதித்து வந்தது. ஜனங்கள் ஏராளமாக கூடியிருந்தனர். மகாதேவதேசாயும் வல்லபாய் படேலும் அவரது குமாரியும் காந்திஜிக்கு முன்பே இங்குவந்துவிட்டார்கள். காந்திஜி ரயிலை விட்டிறங்கியதும் கவர்மெண்டு விடுதியான குமார பார்க்கிற்கு மோட்டாரில் சென்ருர். மைசூர் திவானும் பிரதம காரியதரிசியும் காந்தியை இங்குவந்து கண்டனர். காந்திஜி இங்கு ஒருமணி நேரம் இருந்த பிறகு நந்திமலைக்குப் பிரயாணமானுர். மகாத்மாவின் உபயோகத்திற்காக சர்க்கார் அங்கு 2 பங்களாவை ஒழித்து விட்டிருக்கின்றனர்.



## பர்மாப்பத்திரிகையின் விஷமத்தனம்

வரப்போகும் லேதான் வாரப்பத்திரிகையில் வெளிவரும் செய்தியை விளம்பரப்படுத்தி அதன் மூலம் விற்பனையை அதிகரித்துக் கொள்வதற்காக தினசரியான "ஸன்" பத்திரிகையில் அதன் சொந்தக்காரர் சில நாட்களுக்கு முன்னுல் விளம்பரம் ஒன்றைப் பிரசுரம் செய்திருந்தார். குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டது போல விளம்பரம் விஷமத்தனமான எண்ணத்தோடு செய்யப்பட்டிருக்கிறது. செட்டியார்களை விட பயப்படத்தக்க ஹெட்மென், லேதான் வெளிவந்து விட்டது என்ற வாக்கியங்களை பிரஸ்தாப விளம்பரத்தில் ஒலித்துக் கொண்டிருக்கிறது இதைப் பலமாகக் கண்டித்து பர்மியத் தேனீ எழுதியிருக்கும் ஒரு குறிப்பு தனவணிகனில் காணப்படுகிறது.

## டையூ வட்டகையில் கலகம்.

டையூ டவுன் ஷிப் ஷ்வேஜியல்ன் பின் வீதியில் தொழில் செய்துவரும் செட்டியார்களுக்குச் சொந்தமான நிலங்களைச் சேவாவுக்கு ஒப்புக்கொண்டிருக்கும் இந்தியர்களின் குடிசைகளுக்குத் தீயிட்டும் ஆட்களைத் தாக்கியும் பர்மியர்கள் அட்டகாசம் செய்கின்றனர், காயமுண்ட இந்திய னெருவன் உயிர் துறந்தான்.

பவுண்டோதி செட்டியார் ஒருவருக்குச்சொந்தமான 140 சொச்சம் ஏக்கரை ஒப்புக்கொண்டு வேளாண்மை செய்வதற்காகப் பல தொழில்களுடன் குடிசை போட்டு வசித்துவந்த ஓனுபு வென்பவனுடைய குடிசையிற் புகுந்து அதற்குத் தீவைத்தனர். இரண்டு மூன்று பேர்கள் தாக்குதலால் காயமடைந்தனர் என்று தெரிகிறது.

## வி. வி. கிரிக்கு வெளியேற்ற உத்தரவு

### புதுச்சேரியில் தங்கக்கூடாதாம்

மே 10உ இங்கு நடைபெற வேண்டிய பிரஞ்சு—இந்தியத் தொழிலாளர் மகாநாட்டுக்கு அக்கிராசனம் வகிக்க வந்திருந்த வி. வி. கிரியும், அகிலஇந்திய ரயில்வே தொழிலாளர் உதவிக் காரியதரிசியான ஸ்ரீமான் குருசாமியும் பிரஞ்சு இந்தியா கவர்மெண்டின் ஒரு அவசர உத்தரவால் புதுவையை விட்டு வெளியேறும்படி நேரிட்டபடியால் மகாநாடு நடைபெறவில்லை.

## செட்டியார் கடையில் கொள்ளை

சென்ற ஏப்ரல் 26உயன்று காலை 9 மணி சுமாருக்கு யேஜுவில் லேவாதேவி செய்துவருகிற செட்டியார் கடையென்றில் பர்மியர்கள் புகுந்து கொள்ளையடித்துச் சென்றனராம். அக்கடையின் குமாஸ்தா நீலமேகம் என்பவர் தனிமையாய் அடவு நகைகளை இரும்புப் பெட்டியில் வைத்துக்கொண்டிருந்த சமயத்தில் பர்மியர்கள் பிரவேசித்து அவரைக் கத்தியால் தாக்கிவிட்டு சுமார் 4000 பெறுமானமுள்ள உடைமைகளை எடுத்துச் சென்றதாகக் கூறப்படுகிறது.

குமரன்

காரைக்குடி

தாது-ஞு வைகாசி மீ 1-உ

## ஹிந்து சமூகம்.

ஹிந்து சமூகம் பல விஷயங்களில் பிற்போக்கான நிலையில் இருந்து வருகிறது. ஜாதி பேதத்தினால் ஹிந்து சமூகத்தின் அந்தஸ்தே குறைவான நிலைக்கு வந்து விட்டது. ஜாதி பேதத்தை ஒழிக்கவேண்டுமென்ற கிளர்ச்சி பல்லாண்டுகளாக நடைபெறுகிறதெனினும் முற்றும் ஒழிந்தபாடில்லை. புதிது புதிதாக ஜாதிப் பூசல்கள் உண்டாகிக்கொண்டேயிருக்கின்றன. ஜாதிப் பூசல்கள் காரணமாக நடைபெறும் நிகழ்ச்சிகள் மனிதனிடத்தில் சிறிதேனும் அன்புணர்ச்சியே கிடையாதென்று சந்தேகிக்கத்தக்க நிலையிலிருக்கிறது.

ஜாதிப் பிரிவினையில் ஹிந்து சமூகம் எவ்வளவு பிற்போக்குடையதாயிருக்கிறதோ அவ்வளவு விவாக விஷயத்திலும் பிற்போக்குடையதாயிருக்கிறது. தினந்தோறும் வெளிவரும் பல செய்திகள் ஹிந்து சமூகத்தில் விவாக விஷயத்தில் எவ்வளவு புரட்டுக்கள் நடைபெறுகின்றனவென்பதை எடுத்துக் காட்டுகின்றன. மனித வாழ்க்கையில் விவாகம் மிக முக்கியமான விஷயம். வாழ்நாளை இன்பமுடையதாகவோ, துன்பமுடையதாகவோ செய்யும் சக்தியை 'விவாகம்' பெற்றிருக்கிறது. ஒத்த ஆணும், ஒத்த பெண்ணும் ஒன்று சேரும் மண வினை நிகழுமானால் அதனால் வாழ் நாள் இன்பமுடையதாய் விளங்குதல் கூடும். மன வேற்றுமையுடைய இரண்டு ஜீவன்கள் ஒன்று கூடி விடுமானால் வாழ்நாள் முழுமையும் கீரியும் பாம்பும்போன்று வாழ்க்கை நடத்த வேண்டியதுதான். இந்த உண்மையை நிதர்சனமாகக் கண்டறிந்தும் இன்னும் ஹிந்துசமூகம் மண விஷயத்தில் தனது கவனத்தைச் சரியாகச் செலுத்தவில்லை. ஹிந்து சமூகத்திலுள்ள கல்யாணத் தரகர்கள் தங்கள் வருவாய் கருதி பல புரட்டுக்களின் மூலம் ஏதாவதொரு ஆணையும், பெண்ணையும் பிடித்துச் சேர்த்து வைத்து விடுகின்றனர். அதன் பலனாக கல்யாணம் நடந்த சில தினங்களுக்குள் நியாயஸ்தலம் செல்லும் நிலைமை ஏற்பட்டுவிடுகிறது.

ஹிந்து சமூகம் எதிர்காலத்தில் நல்லதொரு சமூகமாக விளங்க வேண்டுமானால் கல்யாணம் போன்ற முக்கிய விஷயங்களில் புரட்டுக்கள் ஏற்படாதவாறும், காதல் மணங்கள் பெருகுமாறும் ஏற்பாடு செய்தல் வேண்டும். வாழ்க்கைக்கு இன்றியமையாத இத்தகைய விஷயங்களில் அசிரத்தையாக இருக்கக் கூடாது. ஒழுங்கான வாழ்க்கை நடத்தும் திறமையற்ற ஒரு சோம்பேறிக் கூட்டம், ஹிந்து சமூகத்தின் தன்மையறிந்து கல்யாணம் போன்ற முக்கிய விஷயங்களில் புரட்டான வேலைகளைச் செய்துகொண்டிருக்கிறது. அக் கூட்டத்திற்கு இடங் கொடுத்து வளரவிடுவோமானால் அதனால் ஏற்படும் உபத்திரவம் பெரிதாகிவிடும். கல்யாணப் புரட்டுக்களைக் குறித்த பல வழக்குகள் நியாய ஸ்தலங்களை நாடிய செய்திகளைத் தெரிந்துகொண்டும்வாளாவிருத்தல் கூடாது. ஹிந்து சமூகத்தின் அபிவிருத்தியை நாடும் ஒவ்வொருவரும் விவாக விஷயம் செம்மையான முறையில் நடைபெறுவதற்கான ஏற்பாடுகளைச் செய்தல் அவசியமாகும்.

## தோங்குவாவில் குமரன் ஆசிரியர்

சித்திரை மாதம் 19-உ வெள்ளிக்கிழமை மாலை 4-30 க்கு குமரனாசிரியர் திரு சொ. முருகப்பா அவர்கள் வந்து சேர்ந்தனர். நகரத்தார் சார்பாக திருவாளர் அழ. சுப. பழ. பழனியப்ப செட்டியாரவர்கள் பூமாலை யணிவித்தார்கள். மேள வாத்தியத்துடன் நகரத்தார் கார்த்திகை மடத்திற்கு அழைத்து வந்தனர். மாலை சுமார் 8 மணிக்கு தோங்குவா முனிஸிபல் கௌன்ஸிலர் திருவாளர் மு. அழ. பெரியகருப்பன் செட்டியாரவர்கள் தலைமையில் முருகப்பா அவர்கள் பர்மாவிலுள்ள இந்தியர் நிலையைப் பற்றியும், தொழில் முறையைப் பற்றியும் அறிவாளிகளின் கருத்துக்களைப் பற்றியும் சுமார் ஒன்றரை மணி நேரம் உபந்யாசித்தனர். திருவாளர் அ. ராமசாமி அவர்களால் யாவருக்கும் வந்தனங் கூறப்பெற்று இரவு சுமார் 10 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.

(ஒரு நிருபர்)

### சிறுகூடற்பட்டி பாரதமாதா வாசகசாலை.

இவ் வாசகசாலையின் இரண்டாவது ஆண்டு நிறைவு விழா நிகழும் தாது ஆண்டு வைகாசித் திங்கள் முதலாம் நாள் (14—5—36) வியாழக்கிழமை பிற்பகல் 3 மணி முதல் அண்ணாமலை கழக தமிழ் விரிவுரையாளர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெறும். அவ்வமயம் அறிஞர் பலர் சொற்பொழிவாற்றுவார்கள்.

### ஓட்டர் பிரசாரம்

(ஒரு நிருபர்)

சென்னை ஸ்ரீமான் லக்ஷ்மணசாமி முதலியார் அலவாக்கோட்டை வந்திருக்கிறார். பாகனேரி, சிவகங்கை, மதகுபட்டி, அலவாக்கோட்டை போன்ற பல கிராமங்களில் காங்கிரஸ் பொதுக் கூட்டங்கள் நடத்தி அங்கத்தினர்கள் சேர்க்கவும் சென்னை சட்டசபைக்கும் இராமநாதபுரம் ஜில்லா போர்டுக்கும் ஓட்டர் லிஸ்டுத் தயாரிப்பவர்களிடமும் அதற்காக வரும் ஆபீசர்களிடமும் ஒவ்வொருவரும் சென்று அவரவர்களுடைய வாக்கைப் பதிவு செய்து கொள்ள வேண்டுமென்றும் இருசபைகளுக்கும் இன்னின்ன யோக்யதை உடையவர்கள் ஓட்டர்களாகலாம் என்ற விபரங்களையும் வரும் உத்தியோகஸ்தர்களிடம் எவ்விதம் மனுச் செய்துகொள்ள வேண்டுமென்பதையும் நன்றாய் அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் பிரசாரம் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறது. அது சமயம் காரைக்குடி ஜி. கா. கமிட்டித் தலைவர் ஸ்ரீமான் பி. என். சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் பாகனேரி ஸ்ரீமான் எஸ். ஓ. எஸ். பி. உடையப்பா அவர்கள், மதகுபட்டி ஸ்ரீமான் வேலாயுதம் செட்டியாரவர்கள் ஸ்ரீமதி பி. என். எஸ் விசாலாக்ஷி, ஸ்ரீமான் சோலைக்குட்டிஅம்பலம் முதலியவர்களும் கூடவிருந்து பிரசங்கம் செய்வார்கள்

### பிரிவு உபசார விருந்து.

(ஒரு நிருபர்)

புதுக்கோட்டை திரு. சாண்டோ டி. என். நடேசபிள்ளை அவர்கள் பர்மா செல்வதை முன்னிட்டு வலையப்பட்டி, புதுப்பட்டி, உடற்பயிற்சிசாலையாரின் சார்பாக 8—5—36உ வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு புதுப்பட்டி அநுமான் உடற்பயிற்சிசாலையில் பொன்னமராவதி டாக்டர், வில்லியம்ஸ் அவர்கள் தலைமையின்பால் ஓர் விருந்தளிக்கப்பெற்றது.

## காரைக்குடி பழைய மாணவர் சங்கம்

### எட்டாம் வருடக்கொண்டாட்டம்

(நமது நிருபர்)

காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வர வித்யாசாலையின் பழைய மாணவர்கள் சங்கத்து எட்டாம் வருடக் கொண்டாட்டம் நாளது மேமீ 11, 12, 13உ களில் மிக விமரிசையாக நடைபெற்றது.

மேமீ 11உ காலை 8-30 மணிக்கு பழைய மாணவர்கள் ஹைஸ்கூல் கட்டடத்தில் ஒன்றுகூடினார்கள். பழைய மாணவரும் முனிசிபல்கவுன்சிலருமான திருவாளர் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்களால் எல்லோருக்கும் காலை உணவு அளிக்கப்பெற்றது. பிறகு அன்னார் தலைமையில் பழைய மாணவர்களின் முதல் கூட்டம் நடைபெற்றது. தலைமை உபாத்தியாயர் எல்லோரையும் வரவேற்று சிறிது பேசிய பின் காரியதரிசியால் இவ்வருஷ அறிக்கை படிக்கப் பெற்றது. பிறகு சங்க அங்கத்தினரும் வக்கீலுமான திருவாளர் டி பார்த்தசாரதி அய்யங்கார் பி. ஏ. பி. எல். அவர்கள் சங்க வளர்ச்சியைக் குறித்தும் அங்கத்தினர்கள் யாவரும் ஒத்துழைக்க வேண்டுமெனவும் கூற, சங்கத்தின் தலைவர் அவர்களின் முடிவுரையின் பிறகு கூட்டம் கலைந்தது. அன்று இரவு ஸ்ரீ வெற்றி விநாயகர் தியேட்டரில் "மனோஹரா" என்னும் நாடகம் பழைய மாணவர்களால் செவ்வனே நடித்துக் காட்டப்பெற்றது.

மேமீ 12உ மாலை 3 மணிக்கு மீண்டும் பழைய மாணவர்கள் கூடி தங்கள் இரண்டாவது கூட்டத்தைக் கூட்டினார்கள். திருவாளர் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். காலஞ்சென்ற தேசபக்தர்களான ஸ்ரீமதி கமலா நேரு டாக்டர் அன்சாரி ஆகியவர்களுக்கு அனுதாபத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு நிறைவேறியது. சிற்றுண்டிக்கு பிறகு குரூப் போட்டோ எடுக்கப்பெற்றது.

பிறகு மாலை 5-மணிக்கு இப்பள்ளிக்கூடத்தின் பழைய ஹெட்மாஸ்டர் திருவாளர் S. G. சுப்பிரமணிய அய்யரவர்கள் B. A. L. T., பழைய மாணவர்களால் மிக்க குதூகலத்துடன் வரவேற்கப்பட்டு தலைமை வகித்தார்கள். திருவாளர்கள் T. பார்த்தசாரதி அய்யங்காரவர்கள் B. A. B. L. முனிசிபல் உபதலைவர் டாக்டர் S. சுப்பிரமணிய அய்யரவர்கள் M. B. B. S. ஆகியோர் நாட்டின் கைத்தொழிலை ஆதரிக்க வேண்டிய அவசியத்தைக் குறித்து உணர்ச்சி ததும்பபடி மிக அழகாகப் பேசினார்கள். பின்னர் R. சுந்தரராஜய்யங்காரவர்கள், தலைமை ஆசிரியர் N. S. வெங்கட்டராமய்யர் M. A. L. T., ஆகியோர்கள் ஹைஸ்கூலைப் பற்றியும் அதன்ஸ்தாபகர் காலஞ்சென்ற திவான் பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்களின் தாராள குணத்தைப் பற்றியும் பேசினார்கள்.

பிறகு சிதம்பரம் அண்ணாமலை சர்வகலாசாலையின் புரொபஸர் திருவாளர் P. A. சுப்பிரமணிய அய்யரவர்கள், M. A. "தொண்டு" என்பதைப்பற்றிப் பேசினார்கள். பிறகு தலைவர் தக்க முடிவுரை புகன்றபின் கூட்டம் கலைந்தது. இரவு போஜனத்தின் பின் முடிகொண்டான் சங்கீத வித்வான் வெங்கட்டராமய்யரவர்களின் பாட்டுக்கச்சேரி நடைபெற்றது.

மூன்றாவது நாளாகிய 13-5-36உ இரவு ஸ்ரீ வெற்றிவிநாயகர் தியேட்டரில் "மிருச்சகடி" என்னும் நாடகத்தை பழைய மாணவர்கள் உயர்ந்த சீன்களுடன் நடித்துக் காண்பித்தார்கள்.

## ஓட்டர்கள் கவனிக்க

### போலிங் ஸ்டேஷன் விபரம்

1935-ம் வருஷத்து இந்தியா கவர்மெண்டின் சட்டப்படி நியமிக்கப்படும் சென்னை லெஜிஸ்லேடிவ் அசெம்ப்ளித் தொகுதிகளுக்கு ஓட்டர் ஜாப்தாக்கள் தயார் செய்யப்பட்டு வருகின்றன.

1. பொதுத்தொகுதிகள்,
2. மகம்மதியர் தொகுதிகள்
3. இந்திய கிறிஸ்துவர் தொகுதிகள்
4. ஐரோப்பியர் தொகுதிகள்
5. ஆங்கிலோ இந்தியர் தொகுதிகள்

மேற்கண்ட ஒன்று முதல் மூன்றுவரையுள்ள தொகுதிகளுக்கு சென்னை நகரமும் ஒவ்வொரு முனிசிபாலிட்டியும், ஒவ்வொரு ஜில்லாவிலுள்ள ரெவின்யூ டிவிஷனும் ஒரு ரிஜிஸ்டிரேஷன் ஏரியாவாகும்.

முனிஸிபல் கமிஷனர்களும், ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்களும் அவரவர்களுக்குரிய ரிஜிஸ்டிரேஷன் விஸ்தீரணங்களுக்கு ரிஜிஸ்டிரேஷன் ஆபீஸர்களாவர். 4-வது 5-வது தொகுதிகளுக்கு ஜில்லா முழுதும் ஒரு ரிஜிஸ்டிரேஷன் விஸ்தீரணமாகும். டை தொகுதிகளுக்கு அந்தந்த ஜில்லாக் கலெக்டர் ரிஜிஸ்டிரேஷன் ஆபீஸராவர்.

ஓட்டருக்குரிய யோக்கியதாம்சங்களுள்ளவர்கள் எல்லோரும் அவரவர்கள் சம்பந்தப்பட்ட ரெஜிஸ்திரேஷன் விஸ்தீரணத்துக்காக தயாராகும் ஓட்டர் ஜாப்தாவில் தங்களுடைய பெயர் சேரப்படுவதற்கு வேண்டிய முயற்சிசெய்து கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

விண்ணப்பத்தின் பேரில் மாத்திரம் ஓட்டராய்ப் பதிவு செய்யக்கூடிய நபர்கள் அந்தந்த ரிஜிஸ்டிரேஷன் ஆபீஸர்கள், தாசில்தார்கள், டிப்டி தாசில்தார்கள் ஆகியவர்களின் ஆபீசுகளில் விண்ணப்ப பாரம் வாங்கி பூர்த்திசெய்து அந்தந்த ரிஜிஸ்டிரேஷன் ஆபீஸர்களிடம், அவருடைய தலைமை ஆபீஸிலாவது அல்லது அதற்காக நியமிக்கப்பட்ட அதிகாரியிடமாவது அவர்களால் பிரசுரிக்கப்படும் இடத்திலும் தேதியிலும் 1936-ம் வருஷம் மே மாதம் 30உக்குள் விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும். எழுதப்படிக்கத் தெரிந்தவர் என்னும் யோக்கியதாம்சத்துக்காக மட்டும் ஓட்டராய்ச் சேர்க்கப்படவேண்டுமென்று உரிமை கொண்டாடுகிறவர்கள் தாங்கள் கொடுக்கும் விண்ணப்பப் பாரத்தை ரெஜிஸ்டிரேஷன் ஆபீஸர் முன்பாகவாவது கிராம அதிகாரி (கிராம முன்சீப்) அல்லது அவருக்கு மேற்பட்ட சர்க்கார் உத்தியோகஸ்தர்களுடைய சர்டிபிகேட்டுடனாவது தங்கள் கையினாலேயே எழுதிக்கொடுக்கவேண்டும்.

மேற்கண்ட முறையில் கொடுக்கப்படும் விண்ணப்பப் பாரங்கள் அதற்கென்று நியமிக்கப்படும் அதிகாரிகளால் விசாரணை செய்யப்பட்டு ஒவ்வொரு போலிங் ஸ்டேஷனிலும் பைசல் செய்யப்படும்.

மேலே சொல்லப்பட்ட அதிகாரிகள் யாரெனில் எல்லாத் தாசில்தார்களும், இண்டிபெண்டெண்ட் டிபுடி தாசில்தார்களும் எலெக்ஷன் சம்பந்தமாக நியமிக்கப்படும் மூன்று ஸ்பெஷல் டிப்டி தாசில்தார்களும் ஆவார்கள். இந்த ஆபீசர்களின் பெயர்களுக்குக் கீழே அவர்களுக்கு நேரில் குறிப்பிட்டுள்ள ஒவ்வொரு இடங்களிலும் இருக்கும் போலிங் ஸ்டேஷனிலும் முகாம் செய்து மனுக்களை வாங்கிப் பைசல் செய்வார்கள். அவர்கள் கிராமங்களில் எந்த இடத்தில் எப்பொழுது தங்களிடம் மனுக்கள் கொடுக்கவேண்டும் என்பதைப்பற்றி முகாம் செய்வதற்கு முன் நோட்டீஸ் பிரசுரம் செய்து 1936 ஜூன் 10உக்குள் மனுக்களைப் பைசல் செய்வார்கள்.

முனிசிபல் எல்லைக்குட்பட்டவர்கள் அந்தந்த முனிசிபல் கமிஷனர்களிடம் அவர்கள் ஆபீசில் மனுக்கள் கொடுத்துக்கொள்ள வேண்டும்.

இராமநாதபுரம் ரிஜிஸ்டிரேஷன் ஏரியா:- இராமநாதபுரம் தாலூகா, ஸ்பெஷல் டிப்டி தாசில்தார்.

இராமநாதபுரம், கீழக்கரை, உத்திரகோசமங்கை, திருப்புல்லாணி.

இராமநாதபுரம் தாலூகா—தாசில்தார் இராமேஸ்வரம், மண்டபம், தனுஷ்கோடி, தேவி பட்டணம்.

தேவகோட்டை ரிஜிஸ்டிரேஷன் ஏரியா —சிவகங்கை தாலூகா, ஸ்பெஷல் டிபுடி தாசில்தார்.

சிவகங்கை, காட்டு நெடுங்குளம், மேலநெட்டூர், மானாமதுரை, கீழப்பசலை, முத்தநேந்தல், திருப்பாசத்தி, பிரமனூர், திரு



## தமிழர் மகாநாடு

### ஸ்ரீ ராமசாமி நாயக்கர் அறிக்கை

ஈரோடு, மே 10—

ஸ்ரீ. ஈ. வெ. ராமசாமி நாயக்கர் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்:—

காஞ்சிபுரத்தில் ஜூன்மீ கடைசிவாரத்தில் 38-வது தமிழர் மாகாண மகாநாடு கூடப்போவதாக அறிகிறேன். அது விஷயமாய் எனக்கு வந்த கடிதங்களையும், குறிப்பாக ஸ்ரீ வி. ஓ. சிதம்பரம் பிள்ளை எழுதிய கடிதத்தையும் பார்த்தேன்.

காஞ்சிபுரத்தில் 22-11-25ந் தேதி கூட்டிய 31வது மகாநாடு தான் அதுவும் எனது தோழர் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் தலைமையில் கூடிய மகாநாடு தான் என்னை காங்கிரசை விட்டு விரட்டி சுயமரியாதை இயக்கத் தொண்டையும், பார்ப்பனரல்லாதார் இயக்கத் தொண்டையும் செய்யும்படி செய்தது.

எதற்காக காஞ்சிபுரம் மகாநாட்டை விட்டு வெளியேறினேனோ அந்த காரியம் இப்போது தமிழ் மக்களால் சரி என்று ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டது என்றாலும், முழுதும் அது கைகூடுவதில் அனேக கஷ்டங்கள் இருந்து வருகின்றன. எதிரிகளின் எதிர்ப்பு முயற்சி ஓய்ந்த பாடில்லை. இதை அனேகர் அதாவது காங்கிரசில் இருக்கும் பார்ப்பனரல்லாதார்களும் உணருகிறார்கள். ஆனால் பல காரணங்களால் அவர்களும் நானும் ஒத்து வேலைசெய்ய முடியாமல் இருக்கிறது.

காஞ்சிபுரம் 38-வது தமிழர் மகாநாடு கூடும் சமயத்தில் 31-வது மகாநாடு கூடிய சமயத்தில் செய்தது போலவே சகல கட்சி பார்ப்பனரல்லாதார் மகாநாடு என்பதாக ஒன்று கூட்டுங்கள் என்று கேட்டுக்கொள்றேன். அதற்கு ஸ்ரீ எஸ். முத்தைய முதலியாரையோ, சி. எஸ். ரத்தினசபாபதி முதலியாரையோ மற்றும் தங்களுக்கு பிடித்தவர்களையோ அல்லது அதற்காக ஏற்படுத்தும் வரவேற்புக் கமிட்டியார் இஷ்டப்படியோ ஒரு தலைவரை நியமித்து எல்லோருக்கும் அழைப்பு அனுப்புங்கள். அதில் கலந்து பேசி எல்லோருக்கும் திருப்திகரமான ஒரு முடிவைச் செய்து சகல கட்சிகளிலும் புகுத்தப் பாருங்கள். முடியாதபக்ஷம் என்ன செய்வது என்பதையும், எப்படி நாம் எல்லாம் சேர்ந்து தொண்டாற்றுவது என்பதையும் யோசிப்போம். இது அங்கிகரிக்கப்படுமானால் மேலால் எனது அபிப்பிராயங்களை விண்ணப்பித்துக் கொள்ளுகிறேன்.

### காரைக்குடியில் ஹர்த்தால்

மே 13உ புதன்கிழமை யன்று காலை 6 மணி முதல் மாலை 6 வரை டாக்டர் அன்சாரியின் மரணத்தை முன்னிட்டு காரைக்குடியில் பூரண ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. அன்று மாலை மகார் நோன்புப் பொட்டலில் ஒரு பொதுக் கூட்டமும் நடைபெற்றது.

ப்புவனம், மணலூர், பெரியகோட்டை, படமாத்தூர்,

சிவகங்கை—தாசில்தார்

தமறுக்கி, நாட்டரசன்கோட்டை, கொல்லங்குடி, காளையார்கோவில், மங்கலம், கீழப்பூங்குடி, மதகுபட்டி, பாகனேரி.

திருப்பத்தூர்—தாசில்தார்

பிரான்மலை, சிங்கம்புணரி, நெய்க்குப்பை, காரைக்குடி, புதுவயல், கோட்டையூர், செட்டிநாடு.

திருவாடானை—தாலூகா—ஸ்பெஷல் டிப்டி தாசில்தார்.

புளியல், திருவேகம்பத்து, ஆளந்தூர், திருவாடானை, தொண்டி, உப்பூர், ராஜசிங்கமங்கலம்.

திருவாடானை டிப்டி தாசில்தார்—

கண்டதேவி, தேவகோட்டை, கள்ளங்குடி, மங்கலக்குடி, நீலமழகியமங்கலம்.

## பீந்தஸாக் கலகம்

## செட்டியார்கள்மீது துவேஷம்

### டிப்டி கமிஷனர் பேச்சு

பீந்தசா வட்டகையிலேற்பட்டிருக்கும் அமைதிக் குறைவை முன்னிட்டு பெகு டிபுடி கமிஷனர், போலீஸ் சூப்பரெண்டு, சப் டிவிஷனல் ஆபீஸர், டிப்டி போலீஸ் சூப்பரெண்டு ஆகியோர் ஏப்ரல் 12உ யன்று பிரமுகர்களுடன் கலந்து பேசினார்கள். அவ்வமயம் பல பர்மியப் பிரமுகர்களும் செட்டியார் பிரமுகர்களும் விஜயம் செய்திருந்தனர்.

எக் காரணத்தை முன்னிட்டு செட்டியார்கள் நிலத்தில் சாகுபடி செய்கிற இந்தியர்கள் தாக்கப்படுகிறார்கள் என்றும் குடிசைகள் முதலியவற்றிற்குத் தீ வைக்கப் படுகின்றனவென்றும் டெபுடி கமிஷனர் கேட்டார்.

பீந்தசா செட்டியார் நிலச் சுவான்தார் ஒருவர் அளித்த பதில் வருமாறு:-

இவ்வித அமைதிக் குறைவு வருடந்தோறும் ஏற்படுகிறது. சென்ற வருடங்களைக் காட்டிலும் இந்த வருடத்தில் அமைதிக் குறைவு அதிகரித்துவிட்டது. ஒவ்வொரு வருஷத்திலும் இச் சம்பவம் நடைபெறுவதால் இந்த வருடம் அதிகரித்திருப்பதற்குக் காரணம் என்னவென்று சொல்லக்கூடவில்லை. தாக்குதல் தீ வைத்தல் போன்றசெயல்களை அறவே ஒழிப்பதற்கான நடவடிக்கையை டெபுடி கமிஷனரவர்கள் கையாள வேண்டுமென்று விரும்புகிறேன்.

பின்பு பர்மிய நிலச்சுவான்தார் ஒருவர் சாட்சியங்கூறினார். பின்பு இருதரப்பார் வாதங்களையும் கேட்டபின்னர் டெபுடி கமிஷனர் கூறியதாவது:-

இப்போது செட்டியார் பிரமுகர்களும் பர்மியப் பிரமுகர்களும் சொல்லியவற்றைக் கொண்டு பீந்தஸா வட்டகையில் எக்காரணத்தை முன்னிட்டு கலகம் நிகழ்ந்து வருகிறதென்பதை நான் ஓரளவு அறிந்துகொண்டேன். ஊப் பேஜி சொல்லியதுபோல் பார்த்தால் செட்டியார்கள் தங்கள் நிலங்களை ஏல விற்பனை முறையைப் பின்பற்றி அதிக சேவாயார் தருகிறார்களோ அவர் அவர்களுக்கு அடைப்பதைப்பற்றி ஆச்சரியப்படுவதற்கில்லை. என்றாலும்பர்மிய விவசாயிக்கு நிலத்தை யடைத்து உடன்படிக்கை செய்து கொண்ட பின்னர் அதிக சேவா தருகிற இந்திய விவசாயிகட்குத் திரும்ப அடைக்கப்படுகிறதாகச் சொல்லப்படுகிறது. இது உண்மையாயிருக்கும் பட்சத்தில் இந்திய விவசாயிகளுக்கும் பர்மிய விவசாயிகளுக்கும் கலக மூட்டிவைப்பது போலிருப்பதால் செட்டியார்கள் நடந்து கொள்ளும் முறையானது நியாயமாக மாட்டாது.

செட்டியார் பிரமுகரில் ஒருவர்:—

அரசாங்கத்தார் இவ்வருஷத்தில் அதிகவரி விதித்திருப்பதால் அதிக சேவா தருகிறவர்களுக்கு நிலத்தை அடைக்கும்படியாயிற்று.

டெபுடி கமிஷனர்:—

அரசாங்கத் தீர்வை அதிகரித்திருப்பதாகச் சொல்வது போதிய ஆதாரமாக மாட்டாது. அரசாங்கத்தார் அதிகத்தீர்வைவாங்குவதற்கும் எனக்கும் சம்பந்தமில்லை. பர்மா ரெவின்யூ செட்டில்மெண்டு இலாகாவிலிருந்து திருத்தியமைக்கப்பட்டிருப்பதற்கேற்ப நிலவரி அதிகமென்று தோன்றினால் சம்பந்தப்பட்ட இலாகாவுக்கு மனுச் செய்து கொள்ளலாம். பொருளாதார நிலைக்குப் பர்மிய விவசாயிகளும் உறுதுணை போன்றவர்களென்று அவர்களை பாவித்து ஒருவரோடொருவர் சமாதானத்தோடுநடந்துகொள்ள செட்டியார் நிலச்சுவான்தார்கள் முற்படுதல் வேண்டும். அப்போதுதான் செட்டியார்கள் அமைதியுடன் பொருளாதார நிலையைப் பெருக்கிக் கொண்டுபோகமுடியும். எங்களுக்குச் சொந்தமான நிலம். நாங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம் என்ற அபிப்பிராயத்தைக் கொள்ளச் செட்டியார்கள் முற்படுவார்களானால் பர்மிய விவசாயிகளும் அவர்களைப் போல் அபிப்பிராயம் கொள்வார்கள். இது இயற்கையே. பர்மியர்களும் செட்டியார்களும் ஒருவருக்கொருவர் குரோத புத்தியுடன் என்ன வேண்டுமானாலும் செய்வோம் என்ற எண்ணத்துடன் நடந்து கொண்டால் அரசாங்கத்தார் இப்பொழுது இருந்து வருவது போல் இருக்கமாட்டார்கள். பர்மியர்—செட்டியார் இவர்களில் யார் தவறானவர்கள் என்பதை விசாரித்தறிந்து குற்றத்துக் கிலக்கானவர் மீது நடவடிக்கை யெடுத்துக்கொள்ளப்படுமென்பதில் சந்தேகமில்லை. இப்படி பர்மிய விவசாயிகளுக்கும் இந்திய விவசாயிகளுக்கும் கலகம் ஏற்படுவதற்குக் காரணம் யாரென்பதை விசாரித்தறிய வேண்டியது மிக முக்கியமாகும். செட்டியார்கள் பர்மாவிலேயே பர்மியர்களோடு தொடர்பு வைத்துக்கொண்டு திரவியம் திரட்டி வந்தனர். காளடைவில் அவர்கள நிலச்சுவான்தாரர்களாகி விட்டனர். ஏழைப் பர்மியக் குடியானவர்கள் மீது இரக்கம்காட்டி நில சம்பந்தப்பட்ட காரியாதிகளில் நடந்துகொள்வது உசிதமாகும். உடன்படிக்கை செய்துகொண்டு அடைத்த நிலத்தை அதிக சேவாதருகிற இந்திய விவசாயிகளுக்கு அடைப்பதாகச் சொல்லப்படுவதற்கும் இந்திய விவசாயிகளைத் தாக்கியும் அவர்களுடைய குடிசைகளுக்கு நெருப்பிடுவதற்கும் செட்டியார் நிலச்சுவான்தார்தான் காரணமென நினைக்கும்படியாக இருக்கிறது. செட்டியார்கள் தங்கட்கு உடன்படிக்கை மூலம் அடைத்த நிலத்தை அதிக சேவாவை முன்னிட்டு பிறருக்குத் திரும்ப அடைத்ததைக் காரணமாக வைத்துக்கொண்டு பர்மியர்கள் நியாய வரம்பு மீறி பலாத்காரச் செயலில் இறங்கிவிடுவார்களானால் அரசாங்கத்தார் பார்த்துக்கொண்டிருக்க மாட்டார்கள். இத்தகைய பலாத்காரச் செயல்கள் அறவே ஒழியும் பொருட்டு பொது ஜனங்கள் ஒவ்வொருவரும் உதவி செய்யுமாறு விரும்புகிறேன்.



## தந்திச் செய்தி

### சிங்கப்பூர் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

சிங்கப்பூர் மே, 12உ

ரப்பர் முப்பத்துமூன்று வெள்ளி அறுபத்தாறரைக் காசு.

### இரங்கூன் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், மே, 13

| | |
|---|---|
| படகு நெல் | 91—93 |
| ரயில் நெல் | 91—93 |
| கசெய்ன் சின்னமில் | 227-8, 230 |
| கசெய்ன் எஸ்கியூ | 238 |
| மீடோன் பஜார் | 237-8 |
| மீடோன் எஸ்கியூ | 247-8 |
| ரெடி புழுங்கலரிசி மார்க்கெட் லாங் | 262-8 267-8 |
| மில்சார் | 232-8,—250 |
| புல்பாயில்டு | 227-8,—232-8 |
| யாதாலே | 267-8—277-8 |

### சென்னை மார்க்கெட்

சென்னை மே, —2

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 34 | 10 | 0 |
| ஷை வாயிதா | 34 | 11 | 3 |
| மூஸா தோலா 1-க்கு | 34 | 4 | 0 |
| சவரன் மொத்தம் | 22 | 11 | 0 |
| ஷை சில்லறை | 22 | 12 | 6 |
| வெள்ளி 100 ரூ. எடை | 50 | 4 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 3 |

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினங்குக்கும்

(ஏஜண்டினிடமிருந்து)

புறப்படுதல்

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 23—5—36 |
| ரோனு | 6—6—36 |
| ஜூலா | 20—6—36 |

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ராஜூலா | 14—5—36 |
| ரோனு | 28—5—36 |
| ரஜூலா | 11—6—36 |

(French Mail)

சைகோனுக்கு புதுச்சேரியிலிருந்து கப்பல் புறப்படும் தேதி:—

| | | |
|---|---|---|
| ,, | ஏஞ்சர்ஸ் | 10—6—36 |
| ,, | ஸ்பின்க்ஸ் | 6—7—36 |

## அச்சுச் சட்டத் திருத்த முயற்சி

### சட்டசபையில் புதிய மசோதா

இந்தியாவிலுள்ள அச்சுச்சட்டங்களைத் திருத்த சர்தார் சாந்தசிங் இந்தியா சட்டசபையின் அடுத்த கூட்டத்தில் ஒரு மசோதாக் கொண்டுவரப் போவதாக அறிவித்திருக்கிறார். அதன் ஒரு பகுதியில் குறிப்பிட்டிருப்பதாவது:—

1931-ம் வருஷச் சட்டம் 4. (1) பிரிவுக்குப் பின் சட்டசபைகளில் அங்கத்தினர் செய்யும் பிரசங்கங்களை பத்திரிகைகள் உத்தியோக அறிக்கையிலிருந்து வெளியிட்டாலும் மொழிபெயர்த்துப்போட்டாலும் எவ்வித பாதகமும் நேரக்கூடாது. சட்டசபை அங்கத்தினர்களின் பிரசங்கத்தையும் அவர்கள் கவர்மெண்டு கொள்கையைக் கண்டித்துச் செய்த பிரசங்கத்தையும் வெளிவந்த அறிக்கைகளையும் இதன் மொழிபெயர்ப்புகளையும் பத்திரிகைகள் வெளியிட்டால் அதைக் குற்றமாக பாவிக்கக்கூடாது உண்மையான காரியத்துக்காக சட்டசபையில் செய்யப்பட்ட பிரசங்கத்தை அப்படியே வெளியிட்டாலும் மொழிபெயர்த்து வெளியிட்டாலும் அது தவறாகாது. இவ்வித வியாக்கியானங்களை மேற்கண்ட சட்டத்தில் பொருத்தமான இடங்களில் புகுத்துவது இந்த மசோதாவின நோக்கம்.

இந்தியாக் கவர்ன்மெண்டுச் சட்டப்படி இந்தியா சட்டசபை அங்கத்தினர் பலருக்கும் பேசும் உரிமை ஏற்பட்டிருக்கிறது. சபை நடவடிக்கைகளை வெளியிடுவது சட்டசபைக் காரியதரிசியின் கடமை. இந்திய சட்டசபையில் பேசப்படும் உத்தியோக பாஷை ஆங்கிலமாகையால் நடவடிக்கைகளும் ஆங்கிலத்தில் வெளியாகின்றன. ஓட்டர்களில் பலர் கல்வியறிவில்லாதவர்களாக இருக்கின்றனர். ஆகவே தேசபாஷையில் நடவடிக்கைகளை வெளியிடவேண்டியது அவசியம். இந்தியா சட்டசபையில் சமீபத்தில் தலைவர் கொடுத்த தீர்ப்புப்படி அங்கத்தினர் பிரசங்கங்களைப் பத்திரிகைகளில் வெளியிட சில நிர்ப்பந்தங்கள் இருக்கின்றன. இந்தக் குறையை நிவர்த்திக்கவே இந்த மசோதாக் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

### வெயிலின் கொடுமை

#### மூன்றுபேர் மாண்டனர்

டில்லிக்குச் சமீபத்திலுள்ள நிஜாமுதீன் ஸ்டேஷனுக்கு அருகில் 2. எளிய யுவர்கள் இறந்து கிடக்கக் காணப்பட்டார்கள். பிரேத விசாரணையில் உஷ்ணக் கொடுமையால் இறந்தனரென்று முடிவு செய்யப்பெற்றது.

சஞ்சாபைச் சேர்ந்த மாஜி மாஜிஸ்டிரேட் ராய்சாகிப் சாந்தோவும் சூரிய வெப்பம் தாங்காமல் இறந்துபோனார்.



## சர்க்கார் கடன் பத்திரங்கள்.

(சென்னை ட்ரோஜன் கம்பெனியாரிடமிருந்து)

மே 12-வ யன்று கவர்ன்மெண்டு செக்யூரட்டிகளின் விலை:—

| | வாங்குவோர் ரூ. | அ. | விற்போர் ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 3% 1941 | 104 | 12 | 104 | 13 |
| 3% 1951-54 | 104 | 4 | 104 | 6 |
| 3½% கவர்ன்மெண்டு பிராமிசரி நோட்டுகள் | 98 | 7 | 98 | 9 |
| 3½% 1947-50 | 107 | 4 | 107 | 6 |
| 4% 1943 | 110 | 14 | 111 | 1 |
| 4% 1960-70 | 114 | 4 | 114 | 6 |
| 4½% 1955-60 | 119 | 2 | 119 | 4 |
| 5% 1939-44 | 109 | | 109 | 2 |
| 5% 1940-43 | 111 | 8 | 111 | 10 |
| 5% 1945-55 | 120 | 6 | 120 | 8 |
| 5½% 1938-40 | 108 | 4 | 108 | 6 |
| 3% 1956-61 மைசூர் | 101 | 4 | 101 | 6 |
| 3½% 1951-58 „ | 105 | 2 | 105 | 4 |
| 4% 1953-63 „ | 110 | 5 | 110 | 6 |
| 5% 1955 „ | 123 | | 123 | 3 |
| 5½% 1938 „ | 107 | 14 | 108 | |
| 6¼% 1940 „ | 114 | 4 | 114 | 6 |
| 6½% 1941-51 „ | 121 | 4 | 121 | 8 |
| 5% 1943-53 கொச்சி | 111 | 2 | 111 | 4 |

### பங்கு விலைகள்

| பாங்குகள் | ரூபாய். |
|---|---|
| ரிசர்வ் பாங்கு | 127– ¼ |
| இம்பீரியல் பாங்கு (ரூ 500) | 1531– ¼ |
| ஷை (ரூ 125) | 378– ¾ |
| ஸெண்ட்ரல் பாங்கு | 32– ¼ |
| இண்டியன் பாங்கு (ரூ 50) | 132– ½ |
| ஷை (ரூ 10) | 28– ¼ |

### குன்னக்குடியில் அடிஸ்அபாபா தினம்

குன்னக்குடி மே 9

இன்று இரவு 7 மணிக்கு இவ்வூர் மேலப்பாடசாலைக் கருகில் காங்கிரஸ் அபிமானிகளால் அடிஸ்அபாபா தினம் திரு. கு. மு. வீரஸாமி தலைமையில் நடத்தப்பெற்றது. அதுசமயம் ஸ்ரீமான் காரைக்குடி என். எஸ். கணபதி, பிள்ளையார்பட்டி எஸ். சுடலைமுத்துப்பிள்ளை, ஷையூர் மு. முத்தழகு, பரமக்குடி மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை, கு. மு. முத்துராமன் முதலியோர் பேசினார்கள்.

"இந்தப் பொதுக்கூட்டம் நிரபராதிகளும் போதிய ஆயுத பலமில்லாதவர்களுமான அபிஸீனியரை, ஏகாதிபத்திய வெறிகொண்ட இத்தாலி, அநாகரீகமான முறையில் கொடிய விஷவாயுக்களையும், ஆகாய விமானங்களையுங் கொண்டு அடாத முறையில் தாக்கி அதைக் கவர்ந்து கொண்டதற்கு இத்தாலியைப் பலமாகக் கண்டிப்பதோடு ஏழை அபிசீனியாவுக்கு நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறது" என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. இரவு 10 மணிக்குத் தலைவர் முடிவுரையுடன் கூட்டம் நிறைவேறியது.

### சுபாஷ் தினம்.

குன்னக்குடி. மே 10

இன்று இவ்வூரில் காங்கிரஸ் அபிமானிகளால் சுபாஸ் தினம் கொண்டாடப்பட்டது.

இரவு 7 மணிக்கு ஸ்ரீமான் சுப. வேலுப்பிள்ளை தலைமை வகித்தார். ஸ்ரீமான்கள். பெ. மு. கிருஷ்ணன், கு. மு. வீராஸாமி, ராம. சோமசுந்தரம், ஆரு. அண்ணாமலை, கு. மு. முத்துராமன் முதலியோர் பேசினார்கள்.

"இந்தப் பொதுக்கூட்டம் வங்க சிங்கம் சுபாஷ் சந்திரபோசை பழைய ரெகுலேசனால் கைதுசெய்து விசாரணையின்றிச் சிறைப்படுத்தியிருப்பதை அழுத்தமாகக் கண்டித்து அவருடைய உடல்நிலையை உத்தேசித்தாவது விடுதலைசெய்யுமாறு சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறது."

என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. இரவு 9 மணிக்குத் தலைவர் முடிவுரையுடன் கூட்டம் முடிவெய்தியது.

## தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம்

### பாகனேரி.

மே 9வ மாலை 5 மணிக்கு இச்சங்கக் கட்டிடத்தில் இத்தாலியர்கள் அடிஸ் அபாபாவைக் கைப்பற்றியதினிமித்தம் ஓர் அனுதாபக்கூட்டம் கூட்டப்பெற்றது. அவ்வமயம் திரு. பழ. பி. பில்லப்ப செட்டியாரவர்கள் தலைமைவகித்தார்கள். பின் அண்ணாமலைப் பல்கலைக் கழகமாணவர் திரு. வே. மாணிக்கம் அவர்களும், மதுரை அமெரிகன் ஆப்டிகல் கம்பெனி ஏஜண்டு வி. கே. வி. ராம் அவர்களும் திரு. சித. கண்ணப்பன் அவர்களும் அபிஸீனியச் சரித்திரத்தையும் ஷை நாட்டரசனின் பொறுமையையும் நற்குணத்தையும் முசோலினியின் முரட்டுத்தனத்தையும் பலவாறு எடுத்துரைத்து அபிசினியரின் தோல்விக்காக அனுதாபம் காட்டப்பெற்றது. இவ்வூர் பிரமுகர்களான வ. சி. வ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள், சுபாபதி செட்டியாரவர்களின் தாயார் விண்ணுலகெய்தியதற்காகவும் சங்கத்தின் சார்பில் அனுதாபம் காட்டப்பட்டு தலைவர் முடிவுரைகூற மாலை 7 மணிக்கு கூட்டம் முடிவெய்தியது.

### சுபாஷ் தினம்

மறுநாள் 10வ மாலை 5-30 மணிக்கு திரு சுப. அவ. வள்ளியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் ஸ்ரீஜத் சுபாஷ்சந்திர போஸின் தினத்தைக் கொண்டாட ஓர் பொதுக்கூட்டம் இச்சங்கக் கட்டிடத்தில் கூட்டப்பெற்றது. நாட்டரசன் கோட்டை திரு. S. M. லெக்ஷுமணன் செட்டியாரவர்களும், அண்ணாமலை யூனிவர்சிடி மாணவர் திரு. வே. மாணிக்கம் அவர்ளும் மதுரை அமெரிகன் ஆப்டிகல் கம்பெனி ஏஜண்டு திரு. வி. கே. வி. ராம. அவர்களும் திரு. சித. கண்ணப்பன் அவர்களும் ஸ்ரீஜத் சுபாஷ்சந்திர போஸ் அவர்களின் ஜீவிய சரித்திரத்தைப் பற்றியும் அன்னார் நம் நாட்டுக்குச் செய்த தியாகங்களைப்பற்றியும் விரிவாக எடுத்துரைததும் அன்னாரை அரசாங்கத்தார் கைதி செய்திருப்பதற்கு வருந்துவதாகவும் அவரை விரைவில் விடுதலை செய்யக்கோருவதாகவும் சொல்லி முடித்தனர். நன்றி கூறப்பட்டு இரவு 7 மணிக்குக் கூட்டம் இனிது கலைந்தது.

முனிசிபல் சேர்மெனை விருதுநகர் திரு. வி. வி. ராமசாமி அவர்கள் மே 9வயன்று விருதுநகரில் ஒரு சினிமா தியேட்டரைத் திறந்துவைத்தார்கள்.

## நோட்டீஸ்

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு O. S. No. 146/36ல் I. A. 364/36 நம்பரில் கண்டபடி ஷை நம்பர் வாதி காரைக்குடி சுப்பையா பிள்ளை மகன் வெள்ளச்சாமி பிள்ளை அவர்களால் காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷி டாக்கீஸ் பாதி பாகஸ்தரான ஷையூர் சுப்பிரமணிய பிள்ளை மகன் S. ஆறுமுகம்பிள்ளை ஷை வாதிக்குக் கொடுக்கவேண்டிய ரூ. 1225—0—0க்கு ஷை ஆறுமுகம் பிள்ளைக்குச் சொந்தமான மீனாக்ஷி டாக்கீஸ் சாமான்களை 10—5—36ல் ஜப்தி செய்யப்பட்டிருக்கிறது. ஷை வாதிக்கு பிரதிவாதி ஆறுமுகம் பிள்ளையால் இன்னும் செல்லவேண்டியது சுமார் ரூ. 7000 வரையில் இன்னும் இருக்கிறது. அதையும் வசூலிக்க ஏற்பாடாகி வருகிறது.

சுப. வெள்ளைச்சாமி பிள்ளை.



### காங்கிரசுக்கு திஷ்டிபரிகாரம்!

என்ன வெற்றி! என்ன அமர்க்களம் கைவைத்த இடத்திலெல்லாம் வெற்றியா? எதிர்க் கட்சியினர் ஓட இடமில்லாமல் ஒரே தவிப்பாய்த் தவித்துப் போனார்கள். ஜில்லா போர்டு, சட்டசபைகளில் என்ன நேரத்தில் காங்கிரஸ் போட்டிபோட ஆரம்பித்ததோ தெரியவில்லை. ஒன்றிலாவது தோல்வி என்பது கிடையாது. உள்ளபடியே அவர்களோடு போட்டிபோட்ட எதிர்க் கட்சியாரின் ஓட்டத்தைப் பார்த்து காங்கிரஸ்காரருக்கே பரிதாபும் ஏற்பட்டிருக்கவேண்டும். ஏனென்றால் அவர்களும் மனிதச் சித்தம் உடையவர்கள். அதிலும் சத்தியாக்கிரகிகள்! எதிரிகள் துன்பத்தையும் கண்டு இரங்கும் மனப்பான்மையுடையவர்கள்! இப்படிப்பட்ட காங்கிரஸ்காரர்களைப் பார்த்து நாம் இரங்கவேண்டிய நிலைமை அவர்களுக்கு ஏற்பட்டிருப்பதை எண்ண ரொம்ப வருத்தமாக இருக்கிறது.

ஜில்லா போர்டு தேர்தல் யுத்தத்தில் தோல்வியே கண்டறியாத படாக்ளி

## *—* சர்ச்லைட் *—*

யோக்களான காங்கிரஸ்காரர்களுக்கு வேலூரில் படே படே வீழச்சிபொன்று ஏற்பட்டுவிட்டது. அடோவாவைப் பிடித்து டெஸ்ஸியைப் பிடித்து அதைப்பிடித்து இதைப்பிடித்து அட்டி அபாபாவென்ற தலைநகரைப் பிடிங்கப் போகிற சமயத்தில் படாக்ளியோவைத்துரத்தித் துரத்தியடித்து இத்தாலி சோமாலிலண்டுக்கு அவரது படையைச் சேர்ந்தவர்களே திருப்பியனுப்பி யிருந்தால் எப்படியிருக்கும்? மாதிரி சொல்லுங்கள் பார்க்கலாம்.

இந்த உதாரணத்துக்கு உதாரணியாகத் தான் வேலூர் நடவடிக்கை இருக்கிறது. 26 ஸ்தானங்களைப் பிடித்தார்கள் படாதபாடு பட்டு, பாக்கியிருப்பது தலைவர் ஸ்தானம். மெஜாரட்டி கையிலிருக்கும் பொழுது தலைவர் ஸ்தானத்துக்குச் சந்தேகப்பட இடமுண்டா? தலைவர் தேர்தலுக்கு சற்று முன்பாக கட்சிக் கூட்டம் ஒழுங்காக நடந்தது. 26 மெம்பர்களும் அணுத்தவறுமல், காந்திக் குல்லாய், கதர்த்துப்பட்டா, காந்திஜிக்கு ஜே முதலியவற்றுடன் வந்திருந்தார்கள். காங்கிரஸ் சார்பாக நிறுத்தப்பட்ட கண்ணப்ப முதலியாரையே எல்லோரும் ஆதரிப்பதென்று முடிவாயிற்று. அப்புறம் என்ன நடந்தது. சொல்லவா வேண்டும்? காங்கிரஸ் அபேட்சகர் வீழ்த்தப்பட்டார். யாரால்? சொந்தக் கட்சிக் காரர்களால் தான். பத்திரிகைகளெல்லாம் லபோலபோ வென்று அடித்துக் கொள்ளுகின்றன. என்ன அடித்துக் கொண்டால் தான் என்ன? ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ?

கடைசியாக காங்கிரஸ்காரருக்கு ஒருவகையாக நான் ஆறுதல்கூற விரும்புகிறேன். அதென்ன தெரியுமா? "ஐயா காங்கிரஸ் சபை காரு! என்ன நேரத்திலே தேர்தலில் புகுந்தீரோ எடுத்ததிலெல்லாம் வெற்றி. வெற்றி யென்றால் சாமான்ய வெற்றியா, சொல்ல முடியாத வெற்றி. ஊரெல்லாம், பேரெல்லாம் வாய்கொள்ளாமல் பேசினார்கள், புகழ்ந்தார்கள்.

இப்படியே ஓயாமல் வெற்றிபெற்றுக் கொண்டிருந்தால் ஒரு சமயம் போல ஒரு சமயம் இருக்குமா? திட்டிகிட்டி பட்டுவிட்டால் என்ன செய்வது? லட்சக்கணக்கில் செலவழித்துக் கட்டியிருப்பார்கள். ஜோரான கட்டிடமாக இருக்கும்! அதில் ஒரு ஓட்டைச்சட்டியை மாட்டி வைக்கிறார்களல்லவா? வேலூர் சம்பவம் ஒரு திருஷ்டி பரிகாரமென்று வைத்துக்கொள்வதால் நஷ்டமென்ன? ஏனய்யா நான் சொல்லுவது சரிதானே?

### இதுதான் நாகரிக தர்மமா?

இந்த இருபதாம் நூற்றாண்டைச் சுதந்திர யுகம் என்று அழைக்கின்றனர் அறிஞர். முன்பு அடிமைப்பட்ட தேசங்களெல்லாம் தினே தினே விடுதலை பெற்றுக்கொண்டு வருகின்றன. அடிமை வியாபாரங்கள் ஒழிந்துவருகின்றன. மனித வர்க்கம் தோன்றியது முதலே அடிமையாக இருந்துவந்த பெண்களும் இப்பொழுது சுதந்திரம் பெற லாயக்குள்ளவர்கள்தான் என்று ஒப்புக்கொண்டு வருஷங்கள் பல ஆயின. அடிமைத்தனம் அநாகரிகம் என்று விளம்பரப்படுத்தப்பட்ட காலம் இதுதான். ஆனல் தேசம் தோன்றியது முதல் அடிமைத்தனத்தையே அறியாத அபிஸீனியர்—நேற்று வரை சுதந்திர தேவியின் மகத்தான புத்திரர்களாக இருந்துவந்த எதியோபியர் இன்று புதிய அடிமைக்கூட்டத்தினராக ஆக்கப்பட்டிருக்கின்றனர். அடிமைத்தனத்தை வளர்த்து அதைக் கம்பீரமாக ஆட்சிபுரிய வெறிபிடித்துத் திரிகின்றான் முசோலினி. எதியோபியாவின் நாகரிகத்தைப் பரப்புவதாகப் போர் முரசு கொட்டிக்கொண்டு புகுந்தாரே முசோலினி. அனுபவித்த சுதந்திரத்தைப் பறிப்பதுதான் நாகரீகத்தைப் பரப்புவதுபோலும்! நாகரீகத்தைப் பரப்புவதற்கு யுத்த முறைதான் வழி யென்று முசோலினி நினைக்கிறாரா? ஆயிரக்கணக்கான மக்களைக் கொன்று பிணமாக்குவதன் மூலம்தான் நாகரீகத்தைப் பரப்பவியலுமா?

என்னமோ உலகத்திலே இனிமேல் பாக்கியில்லாத அத்தனை கொடுமைகளையும் ஏழை அபிஸீனியர் மீது வெறிபிடித்த முசோலினி செய்து இந்த மகத்தான "நாகரீக தர்ம"த்தைச் செய்திருக்கிறார். சர்வதேச சங்கம் உயிரிருந்தும் பிணமாக இருந்து இந்த நாகரீக தர்மத்துக்கு தாராளமாக இடங்கொடுத்துப் புண்ணியத்தைத் தேடிக்கொண்டு விட்டது. என்னென்ன ஷரத்துகள், என்னென்ன நிர்ப்பந்தங்கள் முதலிய அதிகாரங்களையெல்லாம் வைத்துக் கொண்டிருப்பதாகப் பெருமைபேசிய சர்வதேச சங்கத்துக்கு இத்தாலியின் அட்டூழியங்களைத் தடுக்கக் கையொடிந்து, கண்ணிழந்துபோயிற்று.

என்னவோ சர்வதேச சங்கம் என ஒன்றிருக்கிறதே அதன் உதவி கிடைக்காமலா போய்விடும் பார்த்துக்கொள்ளுவோம் என்று நம்பி யுத்தத்தில் இறங்கிய அபிஸீனியாவை இன்று இத்தாலியின் ஆதிக்கப்படுகுழியில் சிறிகொடுத்துப்போட்ட பழி இந்த சர்வதேச சங்கத்தைத்தான் சேருமென்பதை யார் மறுப்பார்?

## கல்யாணமாகாத வருத்தம்

### யுவதி தற்கொலை

சென்னை, மே 9உ

பத்மாவதி என்ற 20 வயதுப் பெண்ணின் பிரேதம் அவர்கள் குடியிருந்த வீட்டுக்குப் பின்புறமுள்ள கிணற்றில் மிதந்துகொண்டிருக்கக் காணப்பட்டது.

அந்தப் பெண், அவள் தந்தை, சகோதரியுடன் 188 தங்கசாலைத் தெருவில் வசித்துக்கொண்டிருந்தாள். அவர்கள் எல்லோரும் வீட்டின் ஒரு அறையில் படுத்துக்கொண்டிருந்தாள். பத்மாவதியின் சகோதரி எழுந்து பார்த்தபோது அவளை அங்கே காணோம். பின்புறம் சென்று பார்த்ததில் என்றும் திறக்கப்படாதிருந்த கிணற்று மூடி திறக்கப்பட்டிருப்பதைக் கண்டு கூச்சல் போடவும் தந்தை கிணற்றுக்குச் சென்று பார்த்தார். அவள் பிரேதம் மிதந்துகொண்டிருந்தது.

நேற்று பூக்கடை போலீஸ் ஸ்டேஷனில் பிரேத விசாரணை நடைபெற்றபோது கிணற்றில் மூழ்கி தற்கொலையினால் ஏற்பட்ட மரணம் என்று முடிவு செய்யப்பட்டது.

விசாரணையின்போது தந்தையும் சகோதரியும் சாக்ஷியம் கூறினார்கள். அவர்கள் கூறியதிலிருந்து பத்மாவதி தனக்கு கலியாணமாகாமல் இருந்ததைப்பற்றி வருத்தப்பட்டு சந்தோஷமில்லாமலே இருந்துவந்தாள் என்றும், அதுதான் அவள் தற்கொலைக்குக் காரணமாக இருக்குமென்றும் தெரியவந்தது.

---

## மனக்கணக்கு அவதானி குருசாமி

மனக் கணக்கு அவதானி குருசாமி என்பவர். மதுரைஜில்லா திருமங்கலம் தாலுகா பேரையூரில் வேளாளர் வகுப்பில் பிறந்தவர் கணக்குகள் பார்ப்பதில் மிக வல்லுனராயிருக்கிறார். அவருடைய ஆராவது வயதில் இரண்டு கண்களின் பார்வையையும் இழந்துவிட்டதாகவும் இருபத்தேழாவது வயதிலிருந்து கணக்குகளை மிக லெகுவில் தீர்ந்து சொல்லும் வன்மை ஏற்பட்டதாகவுஞ் சொல்லுகிறார். இப்போது அவருக்கு வயது முப்பத்தேழாகிறதாம். சென்ற 6-5-36ல் மகிபாலன்பட்டிக்கு வந்திருந்தார். பலர் பல விதமான கணக்குகளைச் சொல்ல அவர் தாமத மின்றி சரியாய்ப்பதில் சொல்லுவதைக் கண்டு ஆச்சரியமுற்றார்கள். ஒரு கணக்கை அவரிடஞ் சொல்லி அவர் பதில் சொல்லியபிறகு அது எவ்வளவு நீளமானதாக இருந்தாலும் எத்தனைதரங் கேட்டாலும் கணக்கையும் பதிலையுஞ் சரியாய்ச் சொல்லுகிறார். எவ்வளவு நாட்கள் சென்று கேட்டாலுஞ் சொல்ல முடியுமென்றும் சொல்லுகிறார். பல நற்சாட்சிப்பத்திரங்கள் வைத்திருக்கிறார். எழு லக்கம் எட்டு லக்கம் உள்ள தொகைகளை ஏழெட்டு வரிசை சொல்லிக் கூட்டிச்சொல்லச் சொன்னால், சரியான முடிவு சொல்லுவதுடன் அந்த வரிகளையும் தொகைகளையும்கிரமமாய் ஞாபகம் வைத்துக்கொண்டு மீண்டும் எப்பொழுது கேட்டாலும் சொல்லுகிறார். அவருடைய ஞாபக சக்தி வியக்கத் தகுந்ததாய் இருக்கிறது. கணக்குகளை சொல்லும்பொழுது நன்றாய்க் கேட்டுக்கொள்ளுகிறார். சிறிது நேரத்தில் சரியான முடிவு சொல்லுகிறார். இடையில் யாரும் அவருடன் பேசினாலும் பேசிக்கொள்ளுகிறார். எந்தவிதமான கணக்குகளாயிருந்தாலும் சரியாய்ப் பார்த்துச் சொல்லிவிடுகிறார். ஓரன்பரால், ஒரு கோடியே தொண்ணூற்றுயிர ரூபாய்க்கு பதினறு மாதம் இருபது நாள் நாலு மணி இருபது நிமிடங்களுக்கு காலேமூணு வீச முக்கால் வீசம் வட்டியாக எவ்வளவு ரூபாய் வட்டியாகும் என்று கேட்கப்பெற்றது. சிறிது நேரத்தில் எட்டுலெக்ஷத்துப் பதினையாயிரத்தி நூற்றிருபத்தொரு ரூபாய் பத்தணு ஏழரையரைக்கால் பைஸ் என்று பதில் சொன்னார். இப்படிப் பல கணக்குகள் ஆச்சர்யப்படும் விதமாக இரண்டு கண்ணும் தெரியாத நிலையில் எழுதாமல் கொள்ளாமல் மனதாலே பார்த்துச்சொல்வதைக் காண்பது மகிழ்ச்சி தருவதாக இருக்கிறது

## யாரை மணப்பது?

### தந்தையும் மகனும் ஒருத்தியையே காதலிக்கின்றனர்

ஹைதராபாத் மே 6உ

ஸகீனா போகம் என்ற பெண் 7 வயதுச் சிறுமியாயிருக்கையில் சில தோட்டிகள் 6 வருடங்களுக்கு முன் அவளைத் தூக்கிக்கொண்டு போய்ப் பஞ்சாபில் இருக்கும் தோட்டிகளாகிய பீகாரி, முராரி என்பவர்களுக்கு விற்றுவிட்டார்கள். பெண் வயதடைந்தவுடன் முராரி அவளை மணந்துகொள்ள ஆசைப்பட்டான். பெண்ணும் அதற்குச்சம்மதித்தாள். ஆனால்மனைவியை இழந்தடுத்த ரவயதுள்ளமுராரியின் தகப்பனுனபீகாரியும் அவள்மீது காதல் கொண்டாள். ஆனால் அப்பெண் அவனை மணக்க மறுத்திவிட்டாள். எனினும் அவனிடமிருந்து தப்புவது அரிதாயிற்று. எனவே அவள் சிம்லாப் போலீசுக்குச் சென்று முழு விபரத்தையும் உரைத்தாள். உடனே பீகாரியும் முராரியும் கைதிசெய்யப்பட்டனர். சிம்லாப் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அப்பெண்ணின் பெற்றோர்களைக் கண்டுபிடித்து அவளை ஒப்புவிப்பதற்கு மூன்று தினங்களுக்கு முன்பு இங்கு வந்தார். ஆனால் அந்தப் பெண் தன்னுடைய வீட்டை அடையாளங் கண்டுகொள்ளக்கூடவில்லை. தற்சமயம் போலீஸின் பாதுகாப்பில் இருந்துவருகிறார்கள்.

---

### கொ. லெட்சுமிபுரம்

லெக்ஷிமிபுரம் ஸ்ரீ மீனாக்ஷி சங்கத்தின் பதினோவதாண்டு முதல் மாதக்கூட்டம் நாளது தாது ஆண்டு சித்திரைத் திங்கள் 26-ம் நாள் பிற்பகல் 4 மணிக்கு கீழச்சிவற்பட்டி சாண்டோ லெ. சோமசுந்தரன் செட்டியாரவர்கள் தலைமையில் சொக்கலிங்க வித்தியாசாலை மாணவ மாணவிகள் கடவுள் வாழ்த்துப்பாட இனிது ஆரம்பமாயிற்று. தலைவரவர்கள் தேகப்பயிற்சியின் அவசியத்தைப்பற்றியும் சுகாதாரத்தைப்பற்றியும் அரியதோர் பிரசங்கம் செய்தார்கள். பின்னர் சாண்டோ அவர்களின் சீடர் ஏ. முருகுதாராஜ் அவர்களால் தசையாட்சி (Muscles Cortrol) மிக அழகாகச் செய்து காட்டப்பட்டது.

பின் தலைவரவர்களுக்கு வந்தனோபசாரம் கூறப்பெற்று நாட்டு வாழ்த்துப் பாடப்பெற்றதும் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## பிப்ரவரிக்குள் தேர்தல்

### புதிய பட்ஜட் புதிய சபையில்

இம்மாதக் கடைசியில் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் சர்க்கார் 3 வித கட்டளைகளைச் சமர்ப்பிப்பார்கள்.

இந்தியாவில் மாகாண சுயாட்சியை ஆரம்பிக்கும் தேதியை நிர்ணயிப்பதுடன் மட்டுமில்லாமல் பழைய சட்டசபையைக் கலைத்துப் புதிய மந்திரிசபை அமைக்கும்வரை இடைக்கால நிர்வாக சம்பந்தமாக ஓர் ஏற்பாட்டையும் தயாரித்துள்ளார்கள்

போலிங் ஸ்டேஷன்களுக்கு வாடகை வண்டிகளால் ஓட்டர்களை அழைத்துவரக் கூடாதென்று இப்போதுள்ள தடை ஹாமண்டு கமிட்டி சிபார்சுகளுக்கிணங்க நீக்கப்படும்.

நிமியர் அறிக்கையைப்பற்றி மாகாணசர்க்கார்கள் அனுப்பியுள்ள ஆட்சேபங்களை பிரிட்டிஷ் சர்க்கார் கவனித்து வருகிறார்கள். எப்படியும் 1937-ம் வருஷம் பிப்ரவரி மாதத்திற்குள் எல்லா மாகாணங்களிலும் தேர்தல்களை முடித்துவிடவேண்டுமென்று உத்தரவிடுவர். ஸ்திரமான மந்திரி சபையை அமைப்பதுபற்றி தீர்மானிக்க கவர்னருக்கு ஒருமாத அவகாசமிருக்கும். பழைய மந்திரிகள் 1937 மார்ச் 31-ந் தேதிவரை உத்தியோகம் வகித்துவருவார்.

அவசரச் செலவுகள் செய்ய கவர்னருக்கு அதிகாரமளிப்பர். பின்பு புதிய மந்திரிசபை புதிய பட்ஜெட்டைத் தயாரிக்கும்.

இந்த ஜூன் மாதக் கடைசிக்குள் 3 கட்டளைகளும் பார்லிமெண்டில் நிறைவேறிவிடுமெனத் தெரிகிறது.

---

### அனுமதியில்லாமல் சாராயம், பீர் வைத்திருந்ததாக

(நமது நிருபர்)

காரைக்குடி, 9-5-36

காரைக்குடி பெஞ்சு எக்சைஸ் சப்இன்ஸ்பெக்டரவர்கள் தம ஆட்களுடன் சென்ற 6உ சுண்ணாம்புக்காரத் தெருவிலிருந்து வரும்வெள்ளச்சாமி அம்பலம் என்பவர் வீட்டைச் சோதனை செய்து 3½பாட்டில் நாட்டுச் சாராயமும், 16முழுபாட்டில் பீரும், சுமார் 60காலி பீர் பாட்டில்களையும் பறிமுதல் செய்தனர். வெள்ளச்சாமி அம்பலம் அரஸ்டு செய்யப்பட்டு ஜாமீனில் விடப்பட்டிருப்பதாக்தெரிகிறது பறிமுதலான சாமான்கள் போலீஸ்பந்தோபஸ்திலிருக்கின்றன.

## சிரம்பான் செட்டியார்களின் சங்கம்

### ஆருவது ஆண்டு முதலாவது நிர்வாக சபைக் கூட்ட நிகழ்ச்சி

எப்ரல் 27உமாலை 5 மணிக்குசங்கக்காரியாலயத்தில் கூடியது 10 நிர்வாக சபை அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தார்கள். தலைவர் திரு. கு. மு. சொ. பழநியப்ப செட்டியாரவர்கள் அவசர ஜோலியாக கோலாலம்பூர் போக நேரிட்டதால், சபையோர்கள் தீர்மானப்படி, நிர்வாக சபை அங்கத்தினர் திரு அரு. சி. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். காரியதரிசியால் 14-2-36ல் கூடிய ஐந்தாவதாண்டு பொதுக்கூட்ட நிகழ்ச்சி வாசிக்கப்பெற்று, ஏகமனதாக அங்கீகரிக்கப்பெற்றது. காரியதரிசியால் 5-3-36 முதல் 27-4-36 வரை உள்ள கணக்கு வாசிக்கப்பெற்று ஒப்புக்கொள்ளப்பெற்றது. சங்கத்துக்கு வந்த கடிதங்கள் வாசிக்கப்பெற்று ரிக்கார்டு செய்யப்பெற்றன.

1 எஸ்டேட் கமிட்டி சம்பந்தமாய் பரீட்சார்த்தமான கேசு நடத்த தலைமைச் சங்கத்தில் நியமித்திருக்கும் சப்கமிட்டிக்கு நகரி செம்பிலான் கிளையின் சார்பாக கீழ்க்கண்ட மெம்பர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். 1, பெரி. வீர. சிதம்பரஞ் செட்டியார் சிரம்பான், 2. பழ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் சிரம்பான், 3. வெ. பழ. இராமசாமி செட்டியார் கோலப்பிலா 2. பழைய தமிழ டைப்மிஷினை விற்றுவிட்டுப் புதிய டைப்மிஷின் வாங்கிக்கொள்வதென்றும், பழைய மிஷினை விற்க இணங்காவிட்டாலும், புதுமிஷின் வாங்கிக்கொள்வதென்றும் ஏகமனதாகத் தீர்மானிக்கப்பெற்றது. 3. பவர் கொடுக்கும் விஷயமாய்த் தலைமைச் சங்கத்திலிருந்தும், சார்ட்டர்டு பாங்கி ஏஜன்டிடமிருந்தும், வந்த கடிதங்கள் வாசிக்கப்பெற்று, ஆலோசிக்கப்பெற்று, ஷை விஷயத்தை அடுத்த கூட்டத்தில் முடிவு செய்கிறதென தீர்மானிக்கப்பெற்றது. பவ. பழ. கடை அங்கத்தினர் பதவி ராஜினாமாக் கடிதம் வாசிக்கப்பெற்று 1936-ம் வருஷச் சந்தாவை வசூல்செய்துகொண்டு அங்கீகரிப்பதென்று தீர்மானிக்கப்பெற்றது. 5. கூ. அரு. கு. கடை அங்கத்தினர் பதவி ராஜினாமாக் கடிதம் வாசிக்கப்பெற்று, அங்கத்தினர் பதவியை வகித்துவரும்படியாய் ஷையாருக்குக் கடிதம் எழுதுவதெனத் தீர்மானிக்கப்பெற்றது. 6. மு. ராம. வ. வள்ளியப்ப செட்டியார் அங்கத்தினர் பதவி ராஜீனமாக் கடிதம் படிக்கப்பெற்று 1936 ம் வருஷத்து சந்தாவை வசூல் செய்துகொண்டு அங்கீகரிப்பதென்று தீர்மானிக்கப்பெற்றது. 7. மு. ராம. வ. வள்ளியப்ப செட்டியாரின் நிர்வாக சபை அங்கத்தினர்பதவி ராஜீநாமாக் கடிதம் வாசிக்கப்பெற்று அங்கீகரிக்கப்பெற்று, அன்னாருக்குப் பதிலாக பழ. அரு. அருணசலஞ் செட்டியாரவர்களை நிர்வாக சபை அங்கத்தினராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றது.

8. மு. வெ. ராம. கடைஅங்கத்தினர் பதவி ராஜினாமாக் கடிதம் வாசிக்கப்பெற்று, 1936 ம் வருஷ சந்தாவை வசூல் செய்துகொண்டு அங்கீகரிப்பதெனத் தீர்மானிக்கப்பெற்றது. 9. சா. த. க. கருப்பஞ் செட்டியார் லெட்டர் வாசிக்கப்பெற்று, ஷையாரை சா. த. க. சோலையப்ப செட்டியாருக்குப் பதிலாக நிர்வாகசபை அங்கத்தினராகப் பதிவுசெய்துகொள்ளுவதெனத் தீர்மானிக்கப்பெற்றது. 10. கொ. வேலாயுத வன்னியரிடமிருந்து வந்த கடிதம் படிக்கப்பெற்று ரிக்கார்டு செய்யப்பெற்றது. 11. ராய. சொக்கலிங்கம் செட்டியாரவர்களின் கடிதம் படிக்கப்பெற்று ஷையார்கள் இங்கு வரும்போது வரவேற்று உபசரிப்பதெனத் தீர்மானிக்கப்பெற்றது.

---

### சுபாஷ்சந்திரபோஸ் தினம்

சுபாஷ்சந்திரபோஸை, யாதொரு விசாரணையுமின்றி, சர்க்கார் சிறையிட்டிருப்பதைக் கண்டிக்கு முகத்தால் தேசத்தலைவர் ஜவகாது வேண்டுகோட்கிணங்க, மே 10உ காரைக்குடி "பாரதி பள்ளிக்கூடத்தில்" மாணவர்கட்கு விடுமுறை யளிக்கப்பட்டது.

---

### பர்மா புது கவர்னர்

பர்மாவின் புதிய கவர்னர் சர் ஆர்ச்பால்டு கோச்ரேன் மே 8உ சர்க்கார் மாளிகையில் ராஜவிசுவாசப் பிரமாணம் செய்து இரங்கூனில் பதவியேற்றார்.







## சிதம்பரம் சபாநாயகர் கோவில்

### மதஸ்தாபன போர்டு நடவடிக்கை

### டிரஸ்டிகளுக்கு நோட்டீஸ்

சிதம்பரம் மே 6,

சென்னை ஹிந்துமத ஸ்தாபன போர்டார் 1-5-36உ யிட்டு பின் வருமாறு ஒரு அறிக்கையை சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோவில் தர்மகர்த்தாக்களுக்கு அனுப்பியிருக்கிறார்.

பின் குறிப்பிட்டிருக்கும் காரணங்களைக்கொண்டு தென்னுற்காடு ஜில்லா சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோவிலும் அதைச்சார்ந்த ஆதீனங்களும் 1927ம் வருஷ சென்னைச் சட்டம் 2 அத்தியாயம் 6. ஏக்கு உட்படுத்தப்பட்டு எண்டௌமெண்டு போர்டின் கீழ் கொண்டுவருவதே உசிதமென்று மேற்படி போர்டார் அபிப்பிராயப் படுகின்றனர். அம்மாதிரியாக ஏன் சேர்த்துக் கொள்ளப்படக் கூடாதென்று ஜூன் 22-ம் தேதிக்குள்ளாக எழுத்து மூலமாகக் காரணம் காட்டவேண்டு மென்று மேற்படி கோயிலின் தர்மகர்த்தாக்களுக்கும் அதில் சிரத்தையுள்ள மற்றவர்களுக்கும் இதன்மூலமாக அறிவிக்கப்படுகிறது. இந்த நோட்டீசுக்குப் பிரதி உத்திமாகக் கொடுக்கப்படும் ஆட்சேபத்தையோ அல்லது அட்சேபணைகளையோ இந்த போர்டார் 29-6-36உ யன்று சென்னையில் தங்கள் காரியாலயத்தில் விசாரிப்பார்கள்.

### நடவடிக்கையின் காரணம்

வருமானம் இவ்வளவென்று சரியானபடி சமர்ப்பிக்கத் தவறியது, ஒவ்வொரு பஸலியிலும் எவ்வளவு வரவு, எவ்வளவு செலவேன்பதற்கான கணக்கை சமர்ப்பிக்காதது, கோயிலைச்சார்ந்த காலிமனைகளைக் குத்தகைக்கு விடாமலிருந்ததால்வருமானத்தில் நஷ்டமேற்பட்டிருப்பது, போர்டுக்குச் சட்டப்பிரகாரம் கட்டணம் கட்டத்தவறியது முதலியவை காரணங்களாகும். தில்லை ஸ்ரீ கோவிந்தராஜ ஸ்வாமிகோவில் தர்மகர்த்தாக்களுக்கும் இந்தக் கோவில் தர்ம கர்த்தாக்களுக்கும் அடிக்கடி சச்சரவேற்பட்டுக் கொண்டிருப்பதும் மற்றொரு காரணம். ஷை காரணங்களைக் காட்டியே எண்டௌமெண்டு போர்டார் இந்த நோட்டீஸ் கொடுத்திருக்கின்றனர்.

---

### காந்திக் குல்லாய்த் தடை

### பரோடா சமஸ்தானம் பிற்போக்கானதா?

ஷை சமஸ்தானப் பிரஜைகள் மகாநாட்டில் டாக்டர் சுமந்த் மேத்தா தலைமைவகித்துச் செய்த பிரசங்கத்தில் குறிப்பிட்டதாவது.—

பரோடா சமஸ்தானத்தைப்பற்றிப் பத்திரிகைகளில் பிரமாதமாகப் புகழ்ந்திருக்கிறார்கள். உண்மையில் நிலைமை முற்றும் மாறானது. ஏட்டளவில் சமுதாயச் சட்டங்களைச் செய்துவிட்டதால் பயனில்லை, பெண்கல்வி அங்கு மிகவும் குறைவு. பரோடா நகரம் மிகவும் ஏழ்மைப்பட்டுள்ளது. கள்ளுசாராயக் கடைகள் தான் போதிய அளவு இருக்கின்றன.

பஞ்சாயத்து ஸ்தாபனங்களுக்கு அதிகாரமே கிடையாது. இலாகா நிர்வாகம் மோசமாக இருக்கிறது. சரியான மேல்பார்வையில்லை பப்ளிக் சர்விஸ் கமிஷன் பரிட்சையில்லாததால் சரியானவர்கள் வேலைக்கு நியமிக்கப்படுவதில்லை.

உத்தியோக சம்பந்தமான கூட்டம். விருந்து முதலியவைகளில் காந்திக் குல்லாய் அணிவது தடுக்கப்பட்டிருக்கிறது. சர்க்கார் நிர்வாகம் மிகவும் ஊழல் ஜனங்களை அடக்கி ஆளுவதிலே சர்க்கார் காட்ட முன்னவர்களாக இருக்கிறார்களே யன்றி ஜனங்களுடன் ஒத்துழைப்பதில்லை.

# அபிஸீனியாவில் இத்தாலிய ஆட்சி

## படாக்ளியோவுக்கு வைசிராய் பதவி

### அட்டிஸ் மீது படையெடுப்பு

மே 9உ

மெனலிக் சக்கரவர்த்தியின் சகோதரர் குமாரனும் மற்போதைய அபிஸீனிய சக்கரவர்த்தியின் பரம சத்துருவுமான ஒருவர் 120000 துருப்புகளுடன் அட்டிஸ அபாபாவைப் பிடித்துச் சிம்மாசனத்தைக் கைப்பற்ற தலைநகரை நோக்கிப் போய்க் கொண்டிருப்பதாக சொல்லப்படுகிறது. இவர் இத்தாலியருடன் யுத்தம் செய்வாராம்

மே 10உ

அபிஸீனிய சாம்ராஜ்யம் இத்தாலியின் பூரண அதிகாரத்திற்கும் உட்பட்டுவிட்டதாக சர்க்காரின் உத்தரவை முஸோலினி அறிவித்தார்.

இத்தாலிய அரசரான விக்டர் எம்மானுவல் அபிஸீனிய சக்கரவர்த்தி என்ற பட்டத்தை ஏற்றுக் கொள்ளுவார், 'வைசிராய்' என்ற பட்டத்துடன் கவர்னர் ஜெனரால மார்ஷல் படாக்ளியோ அபிஅபிஸீனியாவை ஆளுவார். எராட்ரியா, சோமாலிலந்து கவர்னர்கள் இவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்கள்.

### கிரேஸியானிக்கு உயர்ந்த பதவி

தெற்குப் போர்முனையில் இத்தாலிய தளகர்த்தாக இருக்கும் ஜெனரல் கிரேஸியானி மார்ஷல் அந்தஸ்துக்கு உயர்த்தப்பட்டிருக்கிறார்.

### சக்கரவர்த்தியின் அறிக்கை

அபிஸீனிய சக்கரவர்த்தியான ஹெய்லிஸெலாஸி தற்காலீகமாக ஜெரூஜலத்திலிருப்பார். எனினும் அவர் கூடிய சீக்கிரம் லண்டனுக்கு விஜயம் செய்வார். பத்திரிகைகளுக்கு விடுத்தவோரறிக்கையில் அபிஸீனிய சக்கரவர்த்தி குறிப்பிட்டிருப்பதாவது:—

சர்வதேச சங்கத்தில் அபிஸீனியா பூரண நம்பிக்கையை வைத்தது. அது சர்வதேச சங்கத்தின் உறுப்பாகவே இன்னும் இருந்துவருகிறது. அந்நாட்டை சர்வதேச சங்கத்தைச் சேர்ந்த இத்தாலி வலுவில் தாக்கிற்று. இதை சர்வதேச சங்கமே ஒப்புக்கொண்டிருக்கிறது. வலுவில் அதிக்கிரமம் செய்த நாட்டிடமிருந்து சர்வதேச சங்கம் நஷ்ட ஈடு கோருமென்று நாங்கள் எதிர்பார்க்கிறோம். எளிய நாட்டை வாலிப நாட்டிடமிருந்து பாதுகாத்து நீதி வழங்குமாறு நாங்கள் கேட்டுக்கொள்ளுகிறோம்.

அபிஸீனிய சக்கரவர்த்தி இன்று காலையில் எழுந்து ஆலயத்திற்கும் கிறிஸ்தவ சந்நியாசிகள் மடத்திற்கும் சென்றார். அங்கே 200 அபிஸீனியரிடையே அவர் பிரசங்கம் செய்தார். பிரசங்கத்தைக் கேட்டவர் பலர் அழுதார்கள். தைரியத்தையும் நம்பிக்கையையும் விடாதிருக்கும்படி அரசர்கேட்டுக்கொண்டார்.

### கோட்டையூரில் அபிஸீனியா தினம்

காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவகர்லால் நேரு அவர்களின் உத்திரவுக்கிணங்கக் கோட்டையூர் ஊருணிக்கரையில் மே 9உ மாலை அபிஸீனியருக்கு அனுதாபம் காட்டப் பொதுக்கூட்டமொன்று நடைபெற்றது. ஏராளமான ஜனங்கள் வந்திருந்தனர். திரு. வேலுசாமி அவர்கள் தலைமை வகித்தார்கள். காரைக்குடி குமரன் உதவி ஆசிரியர் திரு. வி. பரமசிவன், ராமசுப்பு, வாசு முதலியவர்கள் இத்தாலியரின் மண்ணாசையையும் அநாகரிகச் செயலையும் கண்டித்து அபிஸீனியர் தோல்விக்கு அனுதாபம் காட்டுவதாகப் பேசித் தீர்மானமொன்றும் நிறைவேற்றப்பட்டது.

### சுபாஷ் தினம்

மறுநாள் பத்தாந் தேதியன்று ஷை இடத்திலேயே சுபாஷ்போஸ் தினமும் கொண்டாடப்பெற்றது. வேலுசாமியவர்கள் தலைமை வகித்தார்கள். ராமசுப்பு, வாசு, வீரபத்திரநாயக்கர் முதலியோர் அரசாங்கத்தார் காலவரையறையின்றிசுபாஷ் போஸைத் தகுந்த முகாந்திரங்களில்லாமல் சிறையில் வைத்திருப்பதைக் கண்டித்துப் பேசி ஒரு தீர்மானம் நிறைவேற்றினர்.

---

ஸ்பெயின் முதன்மந்திரியான டான் மானுவல் அஸானு ஸ்பெயினுயக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றிருக்கிறார்.



## பேய் ஓட்டிய பேதமை

### பெண்ணின் உயிருக்கு ஆபத்து

வேலூர் ராணிப்பேட்டைக் கடுத்த காரைக்கிராமச்சேரியில் வாழ்ந்துவந்த ஹனுமந்தன்என்பவனின்மனைவி அன்னம்மாள் என்பவளுக்குச் சில மாதகாலமாகப் பேய்பிடித்திருந்ததாகவும் அதை நிவர்த்திக்க வேண்டி முனுசாமி என்பவனிடம் பேய் ஓட்டிச் சீர்திருத்தும்படி ஒப்படைத்ததாகவும் கடந்த தை மாதம் கடைசி வியாழக்கிழமை இரவு 10 மணிக்கு அன்னம்மாளைப் பேய் ஓட்டவேண்டி உட்காரவைத்துச் சுற்றிலும் வைக்கோல் போரை யடுக்கி கற்பூரம் கொளுத்தி வைத்தபின்னர் பூசாரி முனுசாமி என்பவன் தன்மேல் ஆவேசம் வந்திருப்பதாகச் சொல்லி நீண்ட அலகு கத்தியை எடுத்துக் கொண்டு ஆடிவந்து அவளை தேகத்தின் பல இடங்களில் குத்தி ரணகாயங்கள் உண்டாக்கியதாகவும் பின்னர் பார்க்கும் பொழுது உடம்பு பூராவும் நெருப்பால் வெந்து போனதாகவும் ரணகாயங்களின் கொடுமை பொறுக்கமாட்டாமல் பொழுது விடிவதற்குள் உயிர்துறந்தாள் எனவும் வழக்குத் தொடரப்பட்டது.

இந்த வழ்க்கை செஷன்ஸ் ஜட்ஜ் விசாரணை செய்து எதிரியைக் குற்றவாளியென மதித்து ஆயுள் தீவாந்தர தண்டனை அனுபவிக்க மே 6உ தீர்ப்பளித்தார்.

---

### தாசியைப் பிராமணப்பெண் என்றதாக

### அட்வகேட் மீது வழக்கு

பம்பாயிலிருக்கும் பி. சுப்பிரமணியய்யர் என்பவர் தம்மை மணக்கப் பிராமண வகுப்புப் பெண் தேவையென விளம்பரஞ் செய்திருந்தார். சென்னை அடவகேட் ஆர். வி. சேஷகிரிராவ் என்பவர் தம் உறவினரென்றுகூறி பவானி என்ற பெண்ணைச் சுப்பிரமணியய்யருக்குக் கல்யாணம் செய்துவைத்தார். பிறகு ஷை ஐயர் அப்பெண் பிராமணப் பெண் அல்லவென்றும் தேவதாசிப் பெண் என்றும் திருநகரி தேவதாசி ஜானகியின் மகளென்றும் கூறி ஸ்ரீ சேஷகிரி ராவ் மீது 10 ஆயிரம் ரூபாய் நஷ்டஈடு கோரி வழக்குத் தொடர்ந்தார். ஹைக்கோர்ட்டில் வழக்குத் தள்ளுபடியாயிற்று. மீண்டும் வாதி அப்பீல் செய்தார். அப்பீல் ஏற்றுக்கொள்ளப்பட்டது. வாதிக்குச் சாதகமாகத்தீர்ப்பு கூறப்பட்டதெனினும நஷ்டஈட்டுத் தொகை எவ்வளவென்பதைக் கீழ்க்கோர்ட்டே நிர்ணயிக்கவேண்டுமென்று கூறப்பட்டது.

---

### புதிய கவர்னருக்குப் பாராட்டு

(நமது நிருபர்)

காரைக்குடி, மே 10உ

சமீபத்தில் ரஜா வெடுத்துக் கொண்டு போகும் சென்னை மாகாண கவர்னர் மேன்மைதங்கிய லார்டு எர்ஸ்கின் துரையவர்களின் ரஜா காலத்திற்கு சென்னை மாகாண கவர்னராகத் தற்காலீகமாக நியமிக்கப்பட்டிருக்கும் மகா-ா-ா-ஸ்ரீ ஸர். கூர்மவெங்கட ரெட்டிகாரு அவர்களுக்கு அன்னாரவர்களின் நியமனத்திற்கு காரைக்குடி நகரத்தார்களின் மனமார்ந்த சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்ளும் பொருட்டு சென்ற 9—5—36உ மாலை 4 மணிக்கு திருவாளர் மு. ராம. பெரியண்னன் செட்டியாரவர்கள் தலைமையின்ல் அன்னாரவர்களி அழகிய சிங்காரத் தோட்டத்தில் பொதுக்கூட்டமொன்று நடைபெற்றது.

தலைவரவாகள் ஸர். கே. வி. ரெட்டிகாரு அவர்களின் அரிய சேவையையும் அவரது குணதிசயங்களைவும்" பற்றிப்பேசிய பின்னர், "இக்கூட்டம். ஸர் கே. வி. ரெட்டிகாரு அவர்கள் மேன்மை தங்கிய லார்டு எர்ஸ்கின் அவர்களின் ரஜா காலத்திற்கு சென்னை மாகாண கவர்னராக நியமிக்கப்பட்டிருப்பதையொட்டி தன் மனப்பூர்வமான சந்தோஷத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறது" என்ற தீர்மானம்ஏகமனதாகநிறைவெறியது.

# கொழும்பு செட்டியார்கள் சங்கம்.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

துக்கும்லேவாதேவிக்கும் அந்நிய தேசங்களைக் காட்டிலும் இந்தியாவே சிலாக்கியமென்று நினைப்பதும் பிசகாகும். இந்தியாவில் சில வகுப்பார் வீட்டைச் சுற்றிக்கொண்டு காலம் தள்ளுவது போல் அல்லாமல் நம்மினத்தார் எத்தனையோ தலைமுறைகளுக்கு முன்னதாக அந்நிய நாடுகளுக்குச் சென்று பெரும் பொருள் ஈட்டிவரும் அனுபவம் நமக்கு ஒரு பெரும் பொக்கிஷமாகும். அதைக் காலக்கிரமத்தில் நாம் இழந்துவிடும்படி நாமே செய்துகொண்டால் அதைவிடப் பிசகு வேறொன்றும் இருக்கமாட்டாது. இந்தியாவில் தொழிற்சாலைகள் ஏற்படுத்துவதும் லேவாதேவியை அதிகமாக்குவதும் அவசியம் தான். ஆனால் அதற்காக அயல் நாடுகளில் நமது தொழில் முறைகளைத் திருத்துவதும் சரியாகமாட்டாது. அவ்வப்போது ஏற்படும் கஷ்ட நஷ்டங்களுக்கு உட்பட்டு தொன்றுபட்டு அயல் நாடுகளில் நாம் செய்துவரும் தொழிலை என்றும் கைவிடாது நடத்திவருவது தான் நமது சமூகத்துக்கு நன்மையென்று நான் வற்புறுத்திச் சொல்லுவேன்.

ஒவ்வொரு தேசத்திலும் மேலே நான் சொன்னபடி அந்நியர்களுக்கு உரிமை எதுவும் ஏற்படாதபடி சட்டதிட்டங்கள் ஏற்படுத்துவது இந்தக்காலத்தில் வெகு சாதாரணமாகப் போய்விட்டது. இந்த தேசத்தில் இலங்கையர்களும் இந்தியர்களும் ஒருவருக்கொருவர் நீண்டகாலமாக அந்நியோன்னியமாக இருந்து இந்தியர்கள் தங்கள் காரியங்களை அமைதியுடன் நடத்திவந்தார்கள். எங்கும் நடைபெறுவதுபோல இலங்கையிலும் ஒரு சிறுபான்மையோர் புதிதாக ஏற்பட்டு இந்தியர்களிடத்தில் துவேஷத்தை உண்டு பண்ணிவிட்டார்கள். ஆனாலும் இந்த தேசத்திலுள்ள அறிவாளிகள் நீண்டகாலமாக ஒன்றுசேர்ந்திருக்கும் இரண்டுநாடுகளின் அந்நியோன்யத்தைக் கெடுத்துவிடுவது தேச நன்மைக்கு கெடுதல் என்பதை உணர்ந்திருப்பார்கள் என்று நாம் நிச்சயமாக நம்பியிருக்கலாம். இலங்கையர்களோடு இந்தியர்கள் சகோதரர்களாக நீண்டகாலம் வாழ்ந்திருக்கச் செய்வதே அறிவாளிகளின் கடமையாகும்.

கவர்ன்மெண்டுக்குச் சொந்தமான நிலங்களை இந்தியருக்குக் கொடுக்கக்கூடாதென்ற சட்டம் ஏற்படுத்தியதும் எஸ்டேட்டுகளில் கூலிவேலை செய்யும் இந்தியர்கள் இந்த தீவுக்கு வரும் விஷயத்தில் மேலும் மேலும் நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்துவதும் இன்னும் இவைபோன்றவைகளும் இந்தியர்களுக்கு விரோதமெனக் கருதப்படும் இந்த தேசத்தில் விளைந்து இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்யப்படும் கொப்பராவிற்கு அதிகவரி இந்தியாவில் ஏற்படுத்தியிருப்பதாக இலங்கையர்கள் குறைகூறுகிறார்கள். இங்குள்ள இந்தியர்களின் உணவு பதார்த்தங்கள் சிலவற்றிற்கு இங்கே அதிகவரி ஏற்பட்டுவிட்டதால் இங்குள்ள இந்தியர்களுக்கு செலவு அதிகமாகிறது. இந்தியாவிலும் இலங்கையிலும் ஒன்றுக்கொன்று ஏற்றுமதி இறக்குமதியாகும் சாமான்களுக்கு அதிகவரி போடுவோமென்று ஒருவருக்கொருவர் போட்டி போடுவது சரியாகமாட்டாது. சிலகாலமாக பொதுவாக இந்தியர்களிடத்திலும் முக்கியமாக மலையாளிகளிடத்திலும்இலங்கையர்கள் துவேஷம் பாராட்டி வருவது எல்லாருக்கும் தெரிந்ததேயாகும். இந்த தேசத்தார் தங்கள் சொந்த மக்களுக்கு முதலில் வேலை கொடுக்கவேணுமென்று பிரயத்தினம் செய்வதில் நமக்கு ஆக்ஷேபனை ஒன்றும் இல்லை. ஆனால் மலையாளிகளிடத்தில் ஒரு சிலரால் உண்டுபண்ணப்பட்ட துவேஷம் காரணமாக இந்த கிளர்ச்சிகளேற்பட்டு இருப்பது முற்றிலும் தகாத காரியமாகும். இந்த தேசத்தார் இந்தியர்களைச் சரியான முறையில் நடத்தாவிட்டால் இரண்டு தேசத்திற்கும் உள்ள வியாபாரங்கள் இருவருக்கும் லாபகரமான முறையில் நடைபெறமாட்டாது.

மலையாளிகளைத் துரத்தவேணுமென்ற கிளர்சியை மலையாளிகளல்லாத மற்ற இந்தியர்கள் நமக்கென்ன வென்று பராமுகமாக இருப்பது பொதுவாக இந்தியர்களுக்குப்பெருத்த தீங்கை உண்டுபண்ணும். இந்தியர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்திருந்தால்தான் இந்த தேசத்தில் நாம் அமைதியுடன் வாழ்ந்து நம்முடைய காரியங்களை நடத்திவரலாம். இலங்கையில் சுமார் 8லக்ஷம் இந்தியர்கள் இருக்கிறார்கள். இந்த தேசத்தில் நாம் ஒரு மைனாரிட்டி வகுப்பாகவேஇருக்கிறோம். மைனாரிடி வகுப்பாருக்கு இடையூறு செய்வதும் அவர்களை நாட்டைவிட்டுத் துரத்துவதும் தற்கால நாகரீகமாக ஏற்பட்டிருக்கின்றது. மெஷீன் கன் துப்பாக்கி ஆகாய விமானத்திலிருந்து எறியப்படும் வெடிக்குண்டு இவைகள் போன்ற ஆயுதங்கள் நம்மிடத்திலாவது இலங்கையர்களிடத்திலாவது இல்லை. நமது குறைகளை பத்திரிகை வாயிலாகவும் இப்படிப்பட்ட சங்கங்கள் மூலமாகவும் சட்டசபைகள் மூலமாகவும் துரைத்தனத்தாரிடத்தில் தெரிவித்துக்கொள்வதுதான் நம்முடைய ஆயுதங்களாக இருக்கின்றன. இந்தியர்கள் ஒன்றுசேர்ந்திருந்தால்தான் அவர்கள் எல்லோருக்குமாவது அவர்களில் ஒரு வகுப்பாருக்காவது இடையூறான காரியங்கள் நேரும்போது அவைகளை நிவர்த்திப்பண்ணிக்கொள்ளலாம். துரைத்தனத்தாரிடத்திலும் பொது ஜனங்களிடத்திலும் தங்களின் உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ளசாதனங்கள் வேண்டுமென்று இந்தியர்கள் ஒருமுகமாக இருந்து சொன்னால்தான் அந்த வார்த்தைகளுக்கு மரியாதையும் பலனும் கிடைக்கும். இவ்விதம் இந்தியர்கள் ஒருமுகமாக இருந்தால்தான் இந்தியாவில் உள்ளோரும் இந்தியத் துரைத்தனத்தாரும் இங்குள்ள இந்தியர்களுக்கு உதவிசெய்ய முன் வருவார்கள்.

இலங்கையில் இந்தியர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் வியாபார சங்கத்தில் நம்மினத்தார் பலர் மெம்பர்களாகச் சேரவேணும். (கரகோஷம்) இந்தியர்கள் ஏற்படுத்தயிருக்கும் சோஷல் கிளப்புகளில் நம்மினத்தார் அதிகமாக சேர்ந்துகொள்ளவேணும்.

நமக்கு ஏற்படும் குறைகளையெல்லாம் நிவர்த்திபண்ணிக் கொள்வதற்கு இந்த நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம் தான் தகுந்த ஸ்தாபனமாகும். உலகத்தில் பற்பல தேசங்களில் நடைபெறும் நடவடிக்கைகளைப் பார்த்துத் தற்கால நிலைமைக்குத் தகுந்தபடி நாமும் கண்ணும் கருத்துமாக இருந்து நமது உரிமைகளை காப்பாற்றிக் கொள்ள வேணும். இந்த 2 சங்கத்தின் மூலமாக நாளடைவில் நாம் எத்தனையோ காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம் இந்த சங்கத்தை நம்மினத்தார் ஒவ்வொருவரும் ஆதரிக்க வேண்டுமென்பதை அவசியமாகக் கொள்ளவேணு மென்று பிரார்த்திக்கிறேன். [கரகோஷம்]

நம்மினத்தாரும் ஒருவருக்கொருவர் அபிப்பிராயபேதம் எத்தனையோ இருக்கலாம். அதை இதுபோன்ற சங்கங்களில் கொண்டு வந்து சேர்த்துவிடக்கூடாது. இந்த சங்கம் பொதுவாக இந்தியர்களுடையவும் முக்கியமாக நம்மினத்தாருடையவும் உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ள ஸ்தாபிக்கப்பெற்றதாகும். இதை ஆதரிப்பது தங்கள் தங்கள் கடமையென்று நம்மில் ஒவ்வொருவரும் எண்ணினால் நம்மினத்தாரின் முன்னேற்றத்திற்கு அதுவே முக்கிய காரணமாகும் மற்ற வகுப்பாரில் வர்த்தக சங்கங்களைப் போல நாமும் இதை ஒரு பெரிய வர்த்தக சங்கமாக வைத்துக்கொள்ளவேணும். இந்த சங்கத்தின் நடவடிக்கைகளை மிகவும் சரியான முறையில் நடத்தவேணும். இதற்குத் தகுந்த சம்பளத்தில் அறிவும் அனுபவமும் உள்ள ஒருவரை உதவிக் காரியதரிசியாக நியமித்து அவருடைய முழு நேரமும் சங்கத்திற்கே உபயோகமாகும்படி செய்யவேணும். மெம்பர்களின் சந்தாவிலிருந்து செலவு செய்யப் போதுமான தொகை இல்லாவிட்டாலும் நகரத்தாரவர்களுக்கு பொதுவாகவிருக்கும் ஐவேஜியிலிருந்து இந்த சங்கத்துக்கு வேண்டும் செலவைச் செய்யலாம். இந்த சங்கத்திற்குச் செய்யும் செலவை நியாயமானதும் அவசியமானதுமான ஒருகாரியத்துக்கு நாம் செய்ததாகவே எண்ணலாமென்று ஸ்ரீமான்களாகிய உங்களிடத்தில் தெரிவித்துக்கோள்கிறேன்.

பிறகு சங்கத்தின் நடப்பு வருடநிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டதும் தலைவரின் முடிவுரையுடனும் வந்தனோபசாரத்துடனும் கூட்டம் இனிது கலைந்தது.







(4-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒருக்கால் படகோட்டியால் காப்பாற்றப்பட்டுவிடில் ஆபத்திற்கிடமாய் முடியுமோவெனத் தோன்றியது. தன் காதலின் ஸ்தூல தேகத்தைக் கண்ணால் கண்டு களிக்கும் பாக்யம் கிடைக்காதோவென ஏங்கினாள். இதற்குள் படகும் அதிக தூரம் சென்றுவிட்டது. தனக்கருகாமையில் காணப்பட்ட ஓர் ஆரண்யத்தின் சமீபமாய் படகை நிறுத்தச்செய்து சேடியை நோக்கி இதோ வருகிறேனெனப் புகன்று ஆரண்யத்துள் நுழைந்தாள்.

அதிகநேரமாகியும் தன் எஜமானி வந்து சேராமையால் சேடி அதிக பதை பதைப்படைந்து பட கோட்டியின் துணைக்கொண்டு ஆரண்யத்துள் புகுந்து தேடினாள். எங்கும் காணப்படவில்லை. விவரிக்கவெண்ணாத மனவேதனையுடன் ஒன்றுந் தோன்றாதவளாய் எஜமானியின் பெற்றோர்களிடம் அறிவிக்கும் பொருட்டு படகை விரைவாய் ஓட்டச் செய்தாள்.

ஆரண்யத்தில் புகுந்த அருங்குணமணியாள் மரம் செடி கொடிகளாலடர்ந்த பயங்கரக் காட்டில் வனதேவதையைப்போல் வெகு தூரம் சென்று ஓர் மரத்தினடியில் அமர்ந்தாள். களங்கமற்றுக் காணப்பட்ட வானத்திரை திடீரென மேகத்தால் பீடிக்கப்பட்டது. இருள், புயல், மழை, இடி மின்னல் எல்லாம் ஏககாலத்தில் ஒன்று சேர்ந்து பயங்கரத் தோற்றத்தைப் பரப்பிக்கொண்டிருந்தன. மனித சஞ்சாரமற்றுக் காணப்பட்ட அக்கானகத்தில் நம்மடவன்னம் இவ்வளவு பயங்கரத் தோற்றத்துள் தனித்திருந்தும் தன் உயிரைப் போக்கிக்கொள்ளத் துணிந்து விட்டாளாதலால், சற்றும் மனங்கலங்காது கையில் கயிற்றுடன் மரத்தின் மீதேறித் தன் உள்ளம் கவர்ந்த காதலனை மறு ஜென்மத்திலேனும் மணந்து மனமகிழ அருள் தரும்படி சகல ஜீவரக்ஷகனை வணங்கித் தன் கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டாள்.

ஆற்றின் சுழலில் தள்ளப்பட்ட கருணாகரன் தண்ணீரில் நீந்த தகுந்த அனுபவம் பெற்றிருந்தானாதலால் அதிக தூரம் வரை சாமர்த்தியத்துடன் முக்குளித்து எழுந்து சமாளித்துச் சென்று ஓர் கரையை அடைந்தான். அதற்கு மேல் எழுந்து நடக்கத் திறனற்று மயக்க மேலீட்டால் சோர்வுற்று மண்ணில் சாய்ந்து உணர்வற்றுக் கிடந்தான். அங்கு தோன்றிய வயோதிக சந்நியாசி ஒருவர் தன் சிஷ்யர்களின் மூலம் கருணாகரனை ஆச்ரமத்தில்கொண்டுபோய்ச் சேர்த்து வேண்டிய ஒளடதப் பிரயோகங்கள் செய்தார். எனினும் ஜுரம் நாளுக்கு நாள் அதிகரித்து பிரக்ஞை பெறக்கூடாமலே யிருந்தான்.

சன்யாசியார் வழக்கம்போல் காட்டிற்குச் சென்றார். சில அசர்ந்தப்பங்களால் தாமதமேற்பட்டு இரவு காட்டின் வழியாய் வந்துகொண்டிருக்கும்பொழுது நமது பெண்மணி மரத்தடியிலுட்கார்ந்து புலம்பிக்கொண்டிருப்பதைப் பார்த்து அதன் ரகசியத்தை அறிய விரும்பி மறைவில் நின்று கவனித்தார். எதிர்பாராத சம்பவமாய் அவள் கழுத்தில் சுருக்கிட்டுக்கொள்வதைக் கண்ட அச்சந்நியாசியார்உடனே மரத்தின் மீதேறி மரண ஆபத்தினின்றும் தப்புவித்து அச்சிறுமியின் அந்தரங்கம் அனைத்தையும் அவளால் விசாரித்தறிந்தார். தன் பராமரிப்பிலிருந்து வரும் வாலிபனின் காதலியாக விருக்கக்கூடுமோவென எண்ணினார். இப்பெண்மணியை இந்நிலையில் அவன்முன் அழைத்துச் சென்றால் ஒருக்கால் புறக்கணித்து தள்ளிவிடுவானோ வெனத் தோன்றியது. உடனே ஓர் சூழ்ச்சி செய்து இப்பெண்ணை காவி உடை, உத்திராக்ஷ மாலைகள் அணியச்செய்து சில ஆலோசனைகள் கூறி அவனுக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்குமாறு கட்டளையிட்டார்.

# கமலாவின் காதல்

அதற்கிணங்க அக்குணவதி பிணியாளி இருக்கும் அறையை அடைந்தாள். அங்கு படுத்திருப்பது தம்காதலனென அறிந்ததும் மனப் பிரேமை அடைந்தவளாய் அண்மையில் நெருங்கி உற்று நோக்கினாள். அப்பரிதாபகரமான தோற்றத்தைக்கண்டு மனம் வெதும்பினாள். அம்மனவேதனையிலும் ஒரு தனி இன்பம் கலந்துறவாடியது. எல்லாம் வல்ல இறைவன் தக்க சந்தர்ப்பத்தில் தன்னை அங்கு கொண்டு சேர்த்திருப்பதை நினைந்து அகமகிழ்ந்தாள். தன் காதலனுக்குத் தொண்டு செய்வதும் அவன் சுகம்பெறவேண்டுமென சதா சர்வேஸ்வரனை தியானிப்பதும் அவளது வேலையாக இருந்துவந்தன.

கருணாகரன் சுய உணர்வடைந்தான். அவன் பிணிகளனைத்தும் நாளுக்குநாள் குணப்பட்டுக்கொண்டே வந்தன. எங்கிருக்கிறோம் யாரால் காப்பாற்றப்பட்டு வருகிறோம் என்பதை அறிந்தான். பெற்ற தாயினும் அதிக அன்புடன் இரவு பகல் தூக்கமற்றுத் தன் அருகிலமர்ந்து தனக்கு உபசாரம் செய்துவரும் அம்மடமயிலாளை நோக்கி சற்குணம் நிறைந்தசன்யாசினித்தாயேஇக்கடையனாகிய எனக்கு நீங்கள் இயற்றிய பேருதவிக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்.

சந்யாசினி:—ஐயா நான் பிரமாதமாய் ஒன்றும் செய்துவிடவில்லை. எனது கடமையையே நான் செய்தேன். அதிருக்கட்டும். நீங்கள் ஆற்றில் நீந்திவந்து ஸ்மரணையற்று ஓர் கரையில் கிடந்ததாக சந்யாசியார் சொல்லக்கேட்டேன். அவ்விதம் நேர்ந்த காரணம் என்னவென்பதைத் தெரிவிக்கக்கூடுமா?

கருணாகரன்:—அம்மா! நான் தனவந்தனாயிருந்தபோது ஓர் அழகிய பெண்மணிக்கும் எனக்கு மிடையில் காதல் ஏற்பட்டு வளர்ந்துவந்தது. அப்பெண்மணியையே எனக்கு மணமுடிக்கப் பெரியோர்கள் முன்னிலையிலும் நிச்சயிக்கப்பட்டிருந்தது. துரதிஷ்ட வசமாய் என் செல்வம் முழுதும் சிதறுண்டு என் மாதா பிதாக்களையு மிழந்து பரம ஏழையாய் நின்று தவித்தேன். அம்மங்கையின் தமையன் கபட எண்ணங்கொண்டு என்னை ஆற்றில் காற்று வாங்க அழைத்துச்சென்று சுழலில் தள்ளிச்சென்றான்! அதற்குமேல் எனக்கொன்றும் தெரியாது.

சந்யாசினி:—ஆஹா! கொடுமை! கொடுமை! அப்படியானால் உங்களைக் காதலித்த அப்பெண்ணும் அதற்குடந்தையாயிருந்து இக்கொடிய செயலுக்கு இணங்கியிருக்கக் கூடுமென நினைக்கிறீர்களா?

கருணாகரன்:—அப்பெண் அந்த வம்சத்தில் உதித்தவளே யாயினும் நான் அறிந்த அளவில் அவள் மிகவும் உண்மையுள்ளவள் நன்றாய்க் கற்றுத் தேர்ந்தவள். நல்ல சொபாவம். என் மீது அதிகப் பிரேமையுடையவள். அவள் அதற்கிணங்கியிருக்க மாட்டாளென்றே நம்புகிறேன்.

சந்யாசினி:—சரி அப்பெண் வேறொருவரையும் கனவிலும் கருதாது உங்களையே அடைவது; தவறினால் உயிர்விடுவதெனத் தீர்மானித்திருக்கிறாளென வைத்துக்கொள்வோம். அப்படியானால் நீங்கள் அவளைப் புறக்கணித்துத் தள்ளிவிடுவீர்களா?

கருணாகரன்:—அவளின் தீர்மானம் அப்படி யிருக்குமாயின் உடனே நான் அவளை ஏற்றுக்கொள்ளச் சற்றும் தயங்கமாட்டேன்.

சன்யாசினி:— அப்படியானால் அப்பெண்ணும் உங்களைப்பின்பற்றி சமீபத்திலேயே தான் வந்தமர்ந்திருக்கிறாள். இதோ அழைக்கிறேனெனக்கூறி, தன் காஷாய உடைருத்ராக்ஷமாலைகளை அகற்றினாள்.

கருணாகரன்:—ஹா! என் ஆசைக்காதலி கமலாவா நீ? என இறுகக் கட்டித் தழுவிக்கொண்டான்.

அப்பொழுது அவ்விரு இளங்காதலர்களின் உள்ளத்தில் எழுந்த உணர்ச்சி இன்பப் பெருக்கை விவரித்தெழுத சாத்தியமில்லை யாதலால், வாசகநேயர்களுக்கே விடுத்துள்ளேன்.

சன்யாசியார் இளங்காதலர்களாகிய கருணாகரனுக்கும், கமலாவிற்கும், மணம் முடித்துவைத்துநல்லாசிகூறினர். கமலாவின் பெற்றோர்கள் தங்கள் ஒரே புதல்வியை இழந்த நேர்ந்ததால் எவ்வளவோ திரவியங்களைச் செலவு செய்து தேடியும் கமலாவைக் காண முடியாது அதே கவலையாய் ஏக்கமடைந்து நோய்வாய்ப்பட்டு உழன்றனர்கள். அவர்களனைவரையும் சன்யாசியார் அழைத்துவரும்படி செய்து, காதலின் தன்மையை அவர்களுக்குப் போதித்துத் தம்பதிகளை ஒப்படைத்தனர். அடங்கா மகிழ்ச்சியுடன் தங்கள் மகளையும் மருமகனையும் பார்த்து ஆனந்தித்து, அறியாது செய்த அடாதகாரியத்திற்கு மன்னிப்புக் கேட்டு, சன்யாசியாரின் முன்னால் சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்து, நல்வாக்குப் பெற்று, இல்லம் திரும்பி சுகமாய்வாழ்ந்துவருகின்றனர்.

## மதனசுந்தரன்
அல்லது
மங்கையின் மையல்

(8ம் பக்கத் தொடர்ச்சி)

புதல்வன் என்று கேட்டவுன் சுந்திரசேகரர் மட்டற்ற மகிழ்ச்சிகொண்டு சுந்தரனை ஆவலுடன் வரவேற்றார். எல்லாரும் இராபோஜனம் செய்துகொண்டு அவரவர்களுக்கு ஏற்படுத்தப்பட்ட மஞ்சத்தில் சயனித்துக் கொண்டனர்.

மறுநாள் பகற்பொழுது ஒருவாறு கழிந்தது. மாலையில் இளங்காதலர்கள் மறுபடியும் பூங்காவில் சந்தித்தனர்.

சுந்தரன்:—சோதரி! தென்றல் மலர்களின் நறுமணத்தை அள்ளி எங்கும் இறைத்து மனத்துக்கு குதூகலத்தை உண்டாக்குகின்றது. மலரின் தேனையுண்டு வண்டுகள் ரீங்கார சப்தத்துடன் உன்னையே சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருக்கின்றனவே. உன்னிடம் ஒரு விஷயம் கேட்க மிகவும் அவாவுள்ளவனாய் இருக்கின்றேன். உனக்கு மனம் நோவாமலிருக்குமாகில் கேட்கின்றேன்.

மதனா:—இளைஞன் கேள்வியை முன்கூடியே உணர்ந்தவள்போலும் ஒப்புக்கொண்ட தற்கிணங்க தலையை அசைத்துக்கொண்டே பூமியை நோக்கியவாறு இருந்தாள்.

சுந்தரன்:—நங்காய்! நான் உன்னை முதல் முதல் பார்த்த அன்றே என் மனம் என்னையும் மீறி உன் வசம் ஆய்விட்டது. உன்மேல் தீராக் காதல் கொண்டேன். சதா உன் அருகில் இருப்பது சுவர்க்கபோகம் அனுபவிப்பது போன்றிருக்கின்றது. உலக வாழ்வு ஒன்றுடனேயே அல்லது பிரம்மச்சரியத்துடன் இருப்பது என்று உறுதிகொண்டுவிட்டேன். என்னை ஆதரிப்பாயா. உனது குயிலினுமினிய குரலில் "ஆம்" என்று ஒரு வார்த்தை சொல்லாயா. என் உயிரே, என்னை காப்பாற்று. என்னை பரீக்ஷை செய்யாதே. சதா உன் ரூபமே என அகக்கண் முன் தோன்றிக்கொண்டேயிருக்கின்றன.

மதனா தலைநிமிர்ந்து புன்முறுவலுடன் கடைக்கண் நோக்கினாள். இருவர் கண்களும் சந்தித்தன. "அன்பரே எனக்கும், தங்களை அன்று கண்டபொழுதே மனம் ஒன்றுயிற்று. நேற்று தங்களைக் காணும் வரை சித்தப்ரமை கொண்டவள்போலவே யிருந்தேன். நானே தங்களிடம் முறையிட்டுக்கொள்ள எண்ணினேன். என் பாக்கியமே பாக்கியம். எனக்குத் தங்களைப் பதியாக கூட்டிவைத்த ஆண்டவனை என்னென்று புகழ்வேன். இன்றே எனது தந்தையிடம் தெரிவித்து நம் விவாகம் சீக்கிரமே நடைபெற ஏற்பாடு செய்கிறேன்" என்றாள்.

சுந்தரன் மதனா சொல்லிய அனைத்தும் கேட்டான். மெய்மறந்தான். அவனையறியாமலே அவனது கைகள் மதனாவின் இடையைச் சுற்றி வளைந்தன. உள்ளத்துடன் உள்ளம் சேர்ந்தது. உயிருடன் உயிர் கலந்தது. உடலுடன் உடல் கலந்து, இதழுடன் இதழ் சேர்ந்தது. பேரானந்த ஆலிங்கனத்தில் ஈடுபட்டிருந்தனர். நாமும் அவர்களை அவ்வானந்த சாகரத்தில்விட்டு விட்டு விலகுவோம்.

பங்களாவில் விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் மிகவும் தடபுடலாய் நடந்தன. சுப தினத்தில் நல் முகூர்த்தத்தில் மதனா, சுந்தரன் இருவர்களுக்கும் விமரிசையாய் விவாகம் நடந்தேறியது.

ஒரு நாள் மாலை புது மண தம்பதிகள் இருவர்களும் பூங்காவில் உலாவினர். அச்சமயம் ஆரம்பத்தில் இளைஞனை எதிர்த்த காளையைக் கண்டனர். அதன் சமீபம் அடைந்தனர்.

மதனா:—காந்தா பார்த்தீர்களா! உங்களை பயமுறுத்திய அக்காளை இப்பொழுது எத்தனை சாதுவாக நிற்கின்றது. அன்று நீங்கள் அன்னியர். இன்று சொந்தமாய்விட்டீர்களென்பதை அதுவும் தெரிந்துகொண்டது.

சுந்தரன்:—பிரியே! மிருக ஜாதிகளின் அறிவை மனிதர்களாலும் ஊகித்து அறிந்துகொள்ள இயலாதென்ற உண்மையை(இ)ன்று கண்கூடாகக் கண்டோம். என் உயிரே! அன்று அது என்னுடன் போர் செய்யாதிருந்தால் நாம் இப்பேரின்ப சுகத்தை எங்ஙனம் அனுபவிக்கக்கூடும். நாம் என்றும் அதன் நன்றிக்கு கடமைப்பட்டுள்ளோம். அன்பே! நம்மைப்போலும் உண்மைக் காதல் இன்பத்தை அனுபவிக்கின்றவர் இவ்வுலகில் வேறு யாரும் இரார் என்பது திண்ணம்" என்று உரைத்தவாறு பூங்காவிற்குள் மறைந்தனர். மதன சுந்தரன் இருவரும் இன்றும் காதல் வெள்ளத்தில் மிதந்துகொண்டிருக்கின்றனர்.

## ஏரியூரில் சுவாமி விக்கிரகங்கள் திருட்டு

(ஒரு நிருபர்)

சென்ற யுவஹு பங்குனிமீ 29உ வெள்ளிக்கிழமை இவ்வூர் சஞ்சீவி மலைமீதுள்ள முனியப்ப சுவாமி கோவில், செல்வ விநாயகர் கோவில், அழகிய நாயகியம்மன் கோவில், அரசூரணிப்பிள்ளையார் கோவில், சேங்கைக் கரை பிள்ளையார் கோவில் ஆகிய கோவில்களில் இரவு திருடர்கள் பிரவேசித்து விக்கிரகங்களை குப்புறப்பிடித்துத் தள்ளி சுவாமிக்கு இருப்பிடத்தில் வைத்திருக்கும் ரத்தினங்களையும் தங்கங்களையும் திருடிப் போய்விட்டார்கள். விடிந்தவுடன் குருக்கள், பண்டாரம், பட்டர்மார்கள் ஆகியோர் கோவில்களைப் போய்ப் பார்த்து பெரும் ஆச்சரியமடைந்தார்கள்.

### நாடி ஜாதகம்

இந்தியாவில், ஆதிகாலத்தில், மகரிஷிகளால் இயற்றப்பட்ட அனேக நாடி ஜாதகங்கள், காணப்படுகின்றன. இந்த கிரந்தங்கள், பனை ஓலைகளில் எழுதப்பட்டவை. இவைகளில், அனேகருடைய ஜாதகங்கள், ஆயுள் பூராவும் நடைபெறும் பலன்களுடன் பூர்வ ஜன்மம், அடுத்த ஜன்ம விவரம், தோஷத்திற்கு சாந்திகளும் கூறப்பட்டிருக்கிறது. தென்னிந்தியாவில் அநேக நாடிகளிருக்கின்றன. இவைகளில் மிகப்பெரிதும், எதிர்கால பலன் நடைபெறுவதில், அனுபவத்தில் பலிதமுள்ளதும், ஜாதகரின் பெயர், பிறந்த ஊர், தாய் தகப்பன் பெயர், இவைகளைக் கூறுவதும், எல்லா நாடிகளுக்கும் அரசனாய் விளங்கும் நாடி மஹாவாக்கியம் ஒன்றே. இந்த நாடியில் ஒரு ஜாதகத்திற்கு 50 முதல் 100 ஓலைகள் வரும். ஆயுள் பூராவும், 6 மாதவாரியாக பலன்கூறும். வியாதிகளுக்கு பரிகாரத்திற்கு சாந்தியும், அவுஷத காண்டமும் அடங்கியிருக்கிறது. ஒளஷதங்கள் அளவுகளுடன், அனேக மூலிகைகளின் பெயரும், மருந்து செய்யும் முறையும், கூறப்பட்டிருக்கிறது. நடைபெறும் சம்பவங்கள் தேதிகளுடனும், மாதமும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த பிரமாண்டமான கிரந்தத்தில் பிரபல உத்தியோகஸ்தர்கள், பணம் லேவாதேவி செய்பவர்கள் வர்த்தகர்கள், இன்னும் அநேக பிரபலஸ்தர்களுடைய ஜாதகங்கள் விரிவான பலன்களுடன் காணப்படும். ஒரு ஜாதகத்திற்கு சார்ஜ் ரூ. 150. ஓலையிலிருந்து நோட்டு புஸ்தகத்தில் எழுதி அனுப்பப்படும். நாடி கிடைக்குமிடம்:—ஆர். சங்கரன், நவீன ஜோதிஷர், 10 சின்ன செட்டி தெரு, செங்கல்பட்டு.

## காரைக்குடி ஜில்லா ஹரிஜன சேவாசங்கம்

(ஒரு நிருபர்)

கொழும்பு, மே 3—

இன்றுமாலை 7மணிக்கு ஹரிஜன சேவா சங்கத்தின் தலைவர் ஸ்ரீஏ. இரங்கசாமி அய்யங்காரவர்களும், காரியதரிசி ஸ்ரீ சேவு. லெ. நா. ரும. நாருயணன் செட்டியாரவர்களும். கமிட்டி மெம்பர்கள் எஸ். எல். பாரதியார் அவர்களும், ஆர். வாசு அவர்களும் இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரசில் வந்திறங்கினார்கள். அவர்களை ஸ்டேஷனில் நண்பர்கள் வரவேற்று உபசரித்தார்கள். இன்று மாலை 6 மணிக்கு மேற்கண்ட நண்பர்கள் அனைவரும் ஜீம்லெபர்டி என்னும் கப்பலில் சிங்கப்பூருக்குப் புறப்பட்டார்கள். மலாயா நாட்டில் சுமார் இரண்டு மாதம் வரை ஹரிஜன சேவா சங்க விஷயமாய் பிரசாரம் செய்வார்கள் எனத் தெரிகிறது.

### கோப்பனுபட்டி
கலைமகள் கல்லூரி

(ஒரு நிருபர்)

இதன்கண் 4-5-36 மாலை 5-மணிக்கு அன்பர் பலர் குழுமினர். மாணுக்கியர் கடவுள் வாழ்த்துப் பாடிய பின்னர் மகிபாலன்பட்டி, திருவாளர் மு. சின்னையா செட்டியாரவர்கள் பெண் கல்வியின் அவசியத்தைப்பற்றிப் பேசத்தொடங்கி நாடு முன்னேற்றமடைவதற்குப் பெண்கள் கல்வியறிவு பெறவேண்டியது மிகவும் முக்கியமென்றும் இவர்கள் அறிவு வளம் பெற்றுவிட்டால் வாழ்க்கைக்குச் சிறந்த துணையாகிக் காலத்திற்கேற்ற சில திருத்தங்களைச் செய்தற்கு முன்னணியில் நிற்பார்கள் என்றும், நம் நாட்டில் மகளிர் கல்வி வளம் பெறுதற்குத் தக்க ஸ்தாபனம் இல்லையேயென்ற பெருங்குறை இப்பொழுது மெய்யன்பராகிய திருவாளர் மெய்யப்ப செட்டியாரவர்கள் நிறுவிய இக்கலைமகள் கல்லூரியால் நீங்கிவிட்டது என்றும் இதில் நம் சிறுமியர்களைக் காலந்தாழ்க்காதனுப்பிக் கற்பிக்கவேண்டுமென்றும் அன்பர்களுள்ளத்திற் பதியுமாறு நீண்ட இனிய சொற்பொழிவாற்றினார்கள். கல்லூரித் தலைவர் வந்தனங்கூற 6-30 மணிக்குக் கூட்டம் இனிது நிறைவேறியது.

## நிர்வாணி கல்யாணம்

### பிறகு வழக்கம்போல் விவாக ரத்து

ஏப்ரல் 27—

2½ வருஷங்களுக்கு முன்னால் மிஸ்டர் ஜேம்ஸ் ஹப். குட்மென் என்கிறவருக்கும் மிஸஸ் ரூசே குட்மென் என்கிற ஸ்திரீக்கும் நிர்வாணமாய்க் கல்யாணம் நடந்தது. அது அப்பொழுது எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தது. இப்பொழுது தன் புருஷன் தன்னைவிட்டு ஓடிப்போய்விட்டார் என்ற காரணத்துக்காக மேற்படி ஸ்திரீ விவாக ரத்துக்கு வியாஜ்ஜியம் போட்டிருக்கிறாள்.

1933-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் காலிபோர்னியாவில் எல்சினோர் நிர்வாணக் காலனியில் அந்த தம்பதிகளுக்கு விவாகம் நடைபெற்றது. பெண், மாப்பிள்ளை, குருமார், விருந்தினர்கள் இவர்களெல்லாரும் சுத்த நிர்வாணமாயிருந்தார்கள். மணப்பெண் கையில் பூச்செண்டு மட்டும் வைத்திருந்தாள். இதைத்தவிர ஒரு நூல் இழைகூட அவர்கள் தேகத்திலில்லை.

அந்த ஸ்திரீயின் வக்கீல், தம்பதிகளுக்குக் கல்யாணமான பிறகு அவர்கள் சில மாதம் கழிந்து நிர்வாணத்தை விட்டுவிட்டார்களென்று தெரிவித்தார்.

### நாட்டரசன்கோட்டை பஞ்சாயத்துபோர்டு

(ஒரு நிருபர்)

இவ்வூர் பஞ்சாயத்துப்போர்டு ஆறுவது வார்டுக்கு 6-5-36உயில் மெம்பர் தேர்தல் நடந்தது. அதில் ஆவி. கண. செ. அடைக்கப்ப செட்டியாரவர்களும் ஆவி. கண. இராமநாதன் செட்டியாரவர்களும் போட்டியிட்டனர். அதிக ஓட்டால் திரு. ஆவி. கண. செ. அடைக்கப்ப செட்டியார் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

## அதிக வேதனையுள்ள மூலங்கள்

ஒரு மனிதன், தான் சாதாரணமான அல்லது இரத்தம் வடியும் கடும் வேதனையுள்ள மூல வியாதிகளினால் கஷ்டப்படுகிறார் என்று அறியும்பொழுது அதனை பூரணமாகக் குணப்படுத்த சரியான முறையைப் பின்பற்ற வேண்டும். இந்த வியாதியை முதலில் கவனிக்காமல் விட்டு விட்டால் முதலில் இரத்தம் கொஞ்சகொஞ்சமாக வடியும். பிறகு பயங்கரமானதும் தாங்க முடியாத அளவில் அதிகரித்து விடுவதோடு, மலச்சிக்கல், பலஹீனம், சுரம் அடிக்கடி வந்து துன்புறுத்தும். இந்த மாதிரியான பயங்கரமான சந்தர்ப்பங்களில் அநுபவமில்லாத மருந்துகளை உபயோகிக்காதீர்கள். எப்பேர்ப்பட்ட நிலைமையிலுள்ள மூல உபத்திரவங்களையும் பூரணமாகக் குணப்படுத்துவதற்கு ஜெர்மனியில் செய்யப்பட்ட ஹாடன்சா (Hadensa) மருந்து ஒன்றுதான் மிகவும் நன்மை பயக்கக் கூடியதும், உண்மையானதுமான மருந்து ஆகும். ஆபரேஷன் செய்துகொண்டு அவஸ்தைப்பட வேண்டிய தேவையில்லை. பிரியமில்லாத மருந்துகளை சாப்பிட வேண்டிய அவசியமுமில்லை. ஹாடென்சாவை முதலில் உபயோகித்தவுடன் இரத்தம் வடிதலை நிறுத்துகிறது. ஹாடென்ஸா ஒன்றுதான் — ஐரோப்பா, அமெரிக்கா, இந்தியா, சைனா, இன்னும் இதர தேசங்களிலுள்ள ஆஸ்பத்திரியிலுள்ள பிரசித்தம் பெற்ற ரண வைத்தியர்களாலும், டாக்டர்களாலும் நன்கு உபயோகிக்கப்பட்ட மருந்து. மிகுந்த வலியுள்ள மூல வியாதியால் கஷ்டப்படுபவர்களுக்கு ஹாடென்ஸா ஒரு வரப் பிரசாதம் என்று அவர்கள் சிபார்சு செய்கிறார்கள். ஆகையால் இன்றே உங்கள் பக்கத்தில் உள்ள மருந்து வியாபாரிகளிடமிருந்துவாங்கி உபயோகியுங்கள். போலிகளைப் பற்றி ஜாக்கிரதையாயிருங்கள்.








## தங்க ஏற்றுமதி

பம்பாய் மே 9.

இந்த வாரத்தில் பம்பாயிலிருந்து ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் மொத்தம் 3620895 ரூ. பெறுமான தங்கம் ஏற்றுமதியாயிற்று. இங்கிலாந்து தங்கமதிப்பு முறையைக் கைவிட்டது முதல் இன்றுவரை பம்பாயிலிருந்து 269,04,26,017 ரூ. பெறுமான தங்கம் ஏற்றுமதியாகி யிருக்கிறது.

### ராமகிருஷ்ண வாசகசாலைத் திறப்புவிழா

(நமது நிருபர்)

காரைக்குடி, மே 11

இவ்வூர் ஆரு. ஆ. வீதிக் கம்பவுண்டிற்குள் அமைக்கப்பட்டுள்ள ராமகிருஷ்ண வாசகசாலைத் திறப்புவிழா நேற்று மாலை 4 மணிக்கு உள்ளூர் டாக்டர் கே. ஆர். ரத்னசாமி அய்யர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கடவுள் வணக்கத்திற்குப் பின்னர் தலைவரவர்கள் வாசகசாலைக் காரியதரிசியால் மாலையணிவிக்கப்பட்டு வரவேற்கப்பட்டார். தலைவரவர்கள் முகவுரையில் வாசகசாலையின் அவசியத்தைப்பற்றி விரிவாக எடுத்துக் கூறி வாசகசாலைகளில் பல பத்திரிகைகளும் தேசப்பயிற்சிக்குரிய சாதனங்களும் இருக்க வேண்டுமென்றும் கூறினார். பின்னர் ஸ்ரீமான்கள் தி. ம. நடராஜன், பீ. எஸ். கணேசஅய்யர், பாலசுப்பிரமணிய பிள்ளை, சுப்பிரமணியதாஸ், என். நடேசய்யர் ஆகியவர்களும் சொற்பொழிவாற்றிய பின்னர் வந்தனோபசாரத்துடன் விழா முற்றுப்பெற்றது.

### தேவஸ்தானக் கமிஷனர்

திருமலை திருப்பதி தேவஸ்தானக் கமிஷனராக திரு. ஏ. ரங்கநாத முதலியாரை 13-5-36-ல் இருந்து சென்னை கவர்மெண்டார் நியமித்திருக்கிறார்கள். அவருக்கு மாதம் 1000 ரூ சம்பளமும் வருஷம் 50 ரூபா சம்பள உயர்வும் போடப்பட்டிருக்கிறது.

## அபிஸீனிய மன்னரின் மணிமுடி

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தாக்கின. தியோடோரின் பீரங்கிப் படைகள் வசம் சுமார் 25 பீரங்கிகளேயிருந்தன. பிரிட்டிஷ் படைகள் எதிரிகளுடன் பொருதி அவர்களது பீரங்கிகளைக் கைப்பற்றி அவற்றைக்கொண்டே கோட்டையை அழிக்க முயற்சித்தனர்.

இரண்டு மணிக்கெல்லாம் பிரிட்டிஷ் பீரங்கிப்படை அங்குவந்து சேர்ந்துவிட்டது. அப்படைகள் இரண்டுமணி நேரமாக கோட்டையைப் பலமாகத் தாக்கின. அதன் பின்னர் பிரிட்டிஷ் படைகள் கோட்டைக்குச் செல்வதற்காக ஓர் உயர்ந்த இடத்தில் ஏறிச்சென்றன. அங்கு வாசலைக் காத்துநின்ற சைன்னியத்தில் முக்கியமானவர்களைக் கொலை செய்துவிட்டு அவர்கள் கோட்டைக்குள் நுழைந்தனர். கோட்டையின் வெளிவாசலைக் கடந்து அடுத்த உள்வசாலைக் கடக்கும்போது தியோடோர் கொலையுண்டு கிடப்பதை அவர்கள் கண்ணுற்றனர். சக்கிரவர்த்தி தனது வீரர்களில்ஒருவரைக்கொண்டே தன்னைச் சுட்டுக்கொன்றுவிட்டாரென்றும் கூறப்படுகிறது. மேலும் சிறிது அக்கிரம செயல்களுக்குப் பின் அபிஸீனியா எளிதாக பிரிட்டிஷார் வசமாயிற்று.

இறந்துபோன சக்கிரவர்த்தியின் முகத்தை ஓர் ஆங்கிலேயர் ஓவியம் வரைந்தாராம். அந்த ஓவியம் தியோடோர் சக்கிரவர்த்தியின் முகத்தோற்றத்தோடு முற்றிலும் பொருந்தியிருந்ததெனக் கூறப்படுகிறது. இந்த யுத்தத்தில் தியோடோர் சக்கிரவர்த்தி உயிரை இழக்க நேரிட்டபோதிலும் அவரது வீரம் பெரிதும் போற்றத்தக்கதாகும். கோட்டை பிரிட்டிஷ்காரர்களின் கைவசமானதும் பிரிட்டிஷ் படைகள் அதன் நாலாபக்கங்களிலும் கொள்ளையிட்டன. அப்பொழுது அது ஓர் ஆங்கிலேய யுத்த வீரரின் காலில் உலோகத்தால் செய்த ஓர் தலையணி தட்டுப்பட்டது. அத்தலையணி அரிய வேலைப்பாடமைந்ததாக விருந்தது. அவ்வீரன் தலையணியை யுத்தத்தில் கிடைத்த ஓர் ஞாபகச்சின்னமாகையால் எடுத்துக் கொண்டான். ஆனால் அது எவ்வளவு விலையுயர்ந்ததென்றோ அல்லது எவ்வளவு பெருமையுடையதென்றோ அவன் சற்றும் உணரவில்லை. அத்தலையணியை கையில் எடுத்துக்கொண்டபோதிலும் அதை எவ்வாறு உபயோகிப்பதென்று அவனுக்கு விளங்கவில்லை. ஆங்கிலேய வீரன் எடுத்த அரும் பொக்கிஷத்தை ஜெர்ஹார்ட்ரோல்ப் கவனித்துக்கொண்டார். அவர் அதன் உண்மையான பெருமையை உணர்ந்தவாதலால் அதைத்தான்பெறக்கருதினார். பிற்காலத்தில் அது விலைமதியா அரும்பொக்கிஷமாகிவிடுமென்பதை ரோல்ப் உடனேயே உணர்ந்துகொண்டார். அவர் ஆங்கிலேய வீரனுக்கு இரண்டு போத்தல் சாராயம் வாங்கிக்கொடுத்துவிட்டு அதற்குபதிலாக மேற்கூறிய தலையணியைப் பெற்றுக்கொண்டார். பின்பு அத்தலையணியே அபிசீனியசக்ரவர்த்தி தியோடரின் கிரீடம் என தெரியவந்தது. 1868-ம் வருடம் ஈஸ்டர்தினம் காலையில் தியோடோர் சக்கரவர்த்தி தனது மணிமுடியையும் மண்ணுலக வாழ்க்கையும் நீத்தார்.

ரோல்ப் தான்பெற்ற கிரீடத்தை புருஷ்யா தேசத்தாசர் வில்லியத்திற்குப் பரிசாக அளித்தார். புருஷ்ய மன்னர் அபபரிசை அருமையாகப் பெற்றுக் கொண்டு அதை இங்கிலாந்து ராணியான விக்டோரியா மகாராணிக்கு பரிசாக அளித்தார். 1869ம் வருடத்தில் விக்டோரியா மகாராணி அக்கிரீடத்தை விக்டோரியா அன்ட் ஆல்பர்ட் பொருட்காட்சி சாலைக்குப் பரிசாக அளித்தார். 1925ம் வருடம் வரையிலும் அது மேற்குறிப்பிட்ட பொருட்சாலையிலேயே இருந்தது. 1925ம் வருடத்தில் விக்டோரியா அன்ட் ஆல்பர்ட் பொருட்காட்சி சாலை நிர்வாகிகளின் தீர்மானத்தின்படி அக்கிரீடம் அபிசீனியச் சக்கிரவர்த்தி ஹெய்லிஸிலாஸியிடம் மீண்டும் ஒப்புவிக்கப்பட்டது.

இப்பொழுது அபிசீனியாவை இத்தாலி சர்வாதிகாரி சிஞ்ஞோர் முஸோலினி வெற்றிகொண்டு விட்டார். அபிசீனிய சக்கிரவர்த்தி ஹெய்லிஸிலாஸி பாலஸ்தினத்திற்குச் சென்றுள்ளார். இனிமேல் அவரது கிரீடத்தின் கதி என்னவாகு மென்பதை எவராலும் கூறமுடியாது.

## பம்பாயில் தற்கொலைகள்

### சப் இன்ஸ்பெக்டர் தம்பதிகளின் கடிதம்

பம்பாய், மே 11

சமீபத்தில் போலீஸ் விடுதியில் இறந்துகிடக்கக் காணப்பட்ட சப் இன்ஸ்பெக்டரின் பெயர் முங்கேகார் என்பதாகும். அவரது முதல் மனைவியான ஸ்ரீமதி இந்திரா 2 வாரத்திற்கு முன்பு தன்னைத்தானே சுட்டுத் தற்கொலை செய்துகொண்டாள். அவள் எழுதிய கடிதத்தில் தன்னைச் சிருஷ்டித்தவரிடம் தான் திரும்பிச் செல்ல விரும்புவதாகக் குறிப்பிட்டிருந்தாள். முங்கேகார் இரண்டாந்தாரம் கலியாணம் செய்துகொண்டதால்தான் அவள் தற்கொலை செய்துகொண்டதாகவும் கூறப்படுகிறது. இன்று காலை முங்கேகாரும் அவரது இரண்டாவது மனைவியும் குண்டுக்காயங்களுடன் இறந்துகிடக்கக் காணப்பட்டார்கள்.

முங்கேகாரின் இரண்டாவது மனைவி எழுதிய கடிதமும் விசாரணையில் படிக்கப்பட்டது. அதில்அவள் "நான் எனது கணவனைப் பின்தொடர்ந்து இந்திராவிடம்போகிறேன். அவளை எனது சகோதரியாக நான் பாவிக்கிறேன்" என்று குறிப்பிட்டிருந்தாள். மரண விசாரணையில் முங்கேகார் எழுதிய கடிதமும் படிக்கப்பட்டது. அதில் எழுதியிருந்ததாவது:—

நான் எனது முதல் மனைவி இந்திராவிடம் செல்லுகிறேன். இதற்காக எவர் மீதும் குறைகூற முடியாது. எங்களிருவருடைய சவத்தையும் ஒரே ஜதையில் வைத்துக் கொளுத்தவேண்டுமென வேண்டிக்கொள்ளுகிறேன்.

### ஜப்பான்- மஞ்சுகோ

ஜப்பான் மஞ்சுகோ புதிய ஒப்பந்தம் ஜூலை மாத முதல் அமுலுக்கு வரும். மஞ்சுகோவை உலகின் நாகரீக நாடுகளில் ஒன்றாகவும் தனக்குச் சமமாகவும் பாவிக்க ஜப்பான் ஒப்புக்கொண்டிருக்கிறது. இவ்வேற்பாடு காரணமாக ஜப்பான் பிரதேச விசேஷ உரிமைகளை விட்டுக்கொடுத்துவிடும். இதனால் ஜப்பான் மஞ்சுகோ உறவு மாறுமென்று எதிர்பார்க்கப் பெறுகிறது.

### ஜட்ஜ்கள் புறப்பாடு

மே 8ந் தேதியன்று சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜ் ஸர் பீஸ்லி, ஜஸ்டிஸ் வாட்ஸ் வொர்த், ஜஸ்டிஸ் ஜெண்டில், ரிஜிஸ்டிரார் மிஸ்டர் ஓயிட் முதலியவர்கள் பம்பாய் மார்க்கமாக இங்கிலாந்துக்குப் பிரயாணமாயினர்.

### தொழில் கல்விக்கு ஆதரவு
பிரிட்டிஷ் நிபுணர் வருகை

இந்தியாவில் தொழிற்கல்விக்கு அதிகவசதி அளிக்கும் நோக்கத்துடன் கல்விமுறையைத் திருத்தியமைக்க இங்கிலாந்திலிருந்து பிரிட்டிஷ் நிபுணர்கள் இருவர் 1936-ம் வருஷக் கடைசியில் இந்தியாவுக்கு வருவார்களெனத் தெரிகிறது.

Printed and Published by N. VEERAPPAN for Dhana Vysian Company Ltd, at the Kumaran Power Press, Karaikudi (S. INDIA.)

